# திரிகடுகம்



[ உரையுடன் ]



ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுகநாவலர்

விலை 50 காசு

உ

கணபதி துணை.

நல்லாதனாரால் செய்யப்பட்டுச்
சங்கமருவிய நீதிநூலாகிய

# திரிகடுகம்.

இது
திருக்கோட்டியூர்

## இராமாநுசாசாரியர்

செய்த உரையுடன்

யாழ்ப்பாணத்து நல்லூர்

## ஆறுமுகநாவலரவர்கள்

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத் தருமபரிபாலகர்பொருட்டு
சென்னை ஹைக்கோர்ட் "ரசீவர்"
திரு. கா. சுப்பிரமணியபிள்ளை எம், ஏ; எம், எல்.
அவர்களால்

சென்னபட்டணம்
வித்தியாநுபாலனயந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.
எட்டாம் பதிப்பு.
**1934.**
இதன்விலை அணா - ௪.
ஸ்ரீமுகவருஷ பங்குனிமீ.

உ

கணபதி துணை.

# திரிகடுகவுரை.

## காப்பு.

கண்ணகன் ஞால மளந்ததூஉங் காமருசீர்த்
தண்ணறும் பூங்குருந்தஞ் சாய்த்ததூஉ—நண்ணிய
மாயச் சகட முதைத்ததூஉ மிம்மூன்றும்
பூவைப்பூ வண்ண னடி.

இதன்பொருள். கண் அகல் ஞாலம் அளந்ததூஉம் - இடமகன்ற பூமியை அளந்ததும்—காமரு சீர்த் தண் நறும் பூங் குருந்தம் சாய்த்ததூஉம் - விரும்பப்பட்ட சிறப்பையுடைய குளிர்ச்சியும் மணமும் பொருந்திய மலர்களையுடைய குருந்தமரத்தை முறித்ததும்—நண்ணிய மாயச் சகடம் உதைத்ததூஉம் - (கஞ்சனாலேவப்பட்டுத் தன்னை வருத்தும்படி) கிட்டிவந்த வஞ்சகமான சகடத்தை உதைத்ததும்—இம் மூன்றும் பூவைப்பூ வண்ணன் அடி - ஆகிய இம்மூன்றுஞ் செய்தவை காயாமலர்போலும் நிறத்தையுடைய திருமாலினது திருவடிகளாம். என்றவாறு.

எடுத்துக்கொண்ட நூல் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள் வணக்கஞ் செய்யப்பட்டது. செய்தவை யென்பது சொல்லெச்சம். இந்நூலுட் பாட்டுத்தோறும் மும்மூன்று பொருள்கள் கூட்டிச் சொல்லப்படுகின்றமை தோன்ற இவ்வணக்கப் பாட்டினும் அப்படியே சொன்னார்.

## நூல்.

அருந்ததிக் கற்பினார் தோளுந் திருந்திய
தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியுஞ்—சொல்லி
னரிலகற்றுங் கேள்வியார் நட்புமிம் மூன்றுந்
திரிகடுகம் போலு மருந்து.

இ - ள். அருந்ததிக் கற்பினார் தோளும் - அருந்ததிபோலுங் கற்பினையுடைய மகளிரது தோளும்—திருந்திய தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியும் - குற்றமற்ற பழைய குடிப்பிறப்பில் வந்து பெருமை பெற்றவரோடு கொள்ளுமுறவும்—சொல்லின் அரில் அகற்றும் கேள்வியார் நட்பும் - கற்கப்படும் நூலிடத்தே குற்றங்களை நீக்க வல்ல கேள்வியையுடையவரோடு செய்யப்படும் நட்பும்—இம்மூன்றும் திரிகடுகம் போலும் மருந்து- ஆகிய இம்மூன்றும் ஒருவனுக்குத் திரிகடுகம்போலும் மருந்துகளாம். எ - று.

கற்பு - நற்குண நற்செய்கைகளோடு தன்கணவனை வழிபடுதல். மாட்சிமை - பெருமை. சொல்லென்றது நூலுக்கு ஆகுபெயர். அரில் - குற்றம்; அதாவது சந்தேகவிபரீதம். திரிகடுகம் சுக்குத் திப்பிலி மிளகு என்னும் இம்மூன்றுங் கூடியது. "திரிகடு கஞ்சுக் கோடு திப்பிலி மிளகு மாகும்" என்பது சூடாமணிநிகண்டு. சுக்கு முதலிய மூன்றும்போல அத்தோள் முதலிய மூன்றும் ஒருவனுக்குத் துன்பநீக்கி இன்பஞ்செய்தலால், இவற்றிற்கு அவை உவமானமாயின. இம்முதற்பாட்டிற் சொல்லப்பட்ட திரிகடுகமென்னுஞ் சொல்லே சிறப்புப்பற்றி இந்நூலுக்கும் பெயராகக் கொள்ளப்பட்டது. (௧)

தன்குணங் குன்றாத் தகைமையுந் தாவில்சீ
ரின்குணத்தா ரேவின செய்தலு—நன்குணர்வி
னான்மறை யாளர் வழிச்செலவு மிம்மூன்று
மேன்முறை யாளர் தொழில்.



இ - ள். தன் குணம் குன்றாத் தகைமையும் - தனது குடிப்பிறப்பின் குணம் குறைவுபடாமைக்கு ஏதுவாகிய ஒழுக்கமும்—தா இல் சீர் இன் குணத்தார் ஏவின செய்தலும் - அழிவில்லாத கீர்த்தியைத் தருகின்ற இனிய குணத்தையுடையோர் ஏவிய தொழில்களைச் செய்தலும்—நன்கு உணர்வின் நான்மறையாளர் வழிச் செலவும் - தருமவியல்பை அறியுமறிவையுடைய பிராமணர் கற்பித்த வழியிலே நடத்தலும்—இம் மூன்றும் மேல் முறையாளர் தொழில் - ஆகிய இம்மூன்றும் மேலாகிய முறையினையுடையவரது தொழில்களாம். எ - று.

நான்மறை இருக்கு, யசுர், சாமம், அதர்வம். (௨)

கல்லார்க் கினனா யொழுகலுங் காழ்கொண்ட
வில்லாளைக் கோலாற் புடைத்தலு—மில்லஞ்
சிறியாரைக் கொண்டு புகலுமிம் மூன்று
மறியாமை யான்வருங் கேடு.

இ - ள். கல்லார்க்கு இனன் ஆய் ஒழுகலும் - கற்றறியாதவர்க்கு உறவினனாய் நடத்தலும்—காழ்கொண்ட இல்லாளைக் கோலால் புடைத்தலும் - மனவுறுதி கொண்ட மனைவியைக் கோலாலடித்தலும்—இல்லம் சிறியாரைக் கொண்டு புகலும் - தம் வீட்டிடத்துச் சிற்றறிவாளரை உடன் கொண்டு புகுதலும்—இம்மூன்றும் அறியாமையான் வரும் கேடு - ஆகிய இம்மூன்றும் தம்மறியாமையினாலே தமக்கு வருங் கேட்டை விளைப்பனவாம். எ - று.

மனவுறுதி கற்பு. காழ் வித்துக்கும் பெயராதலால், சூல்கொண்டவெனினுமாம். கேடு செய்வனவற்றைக் கேடென்றார்.

பகைமுன்னர் வாழ்க்கை செயலுந் தொகைநின்ற
பெற்றத்துட் கோலின்றிச் சேறலு—முற்றன்னைக்
காய்வானைக் கைவாங்கிக் கோடலு மிம்மூன்றுஞ்
சாவ வுறுவான் றொழில்.

இ - ள். பகை முன்னர் வாழ்க்கை செயலும் - தன்பகைவர்முன்னே பெருஞ்செல்வத்தோடு வாழ்தல் செய்தலும்—தொகை நின்ற பெற்றத்துள் கோல் இன்றிச் சேறலும் - கூட்டமாய் நின்ற பசுக்களினடுவே கையிற் கோலில்லாது செல்லுதலும்—முன் தன்னைக் காய்வானைக் கை வாங்கிக் கோடலும் - முன்னே நின்று தன்னை வருத்துவோனைத் தனக்கு உறவாக்கிக் கொள்ளுதலும்—இம்மூன்றும் சாவ உறுவான் தொழில் - ஆகிய இம்மூன்றும் சாவ வேண்டுவோனுடைய செய்கைகளாம். எ - று.

வழங்காத் துறையிழிந்து நீர்ப்போக்கு மொப்ப
விழைவிலாப் பெண்டிர்தோள் சேர்வு—முழந்து
விருந்தினனாய் வேற்றூர் புகலு மிம்மூன்று
மருந்துயரங் காட்டு நெறி.

இ - ள். வழங்காத் துறை இழிந்து நீர்ப் போக்கும் - யாவரும் நடவாத துறையிலிழிந்து நீரிலே போகுதலும்—ஒப்ப விழைவு இலாப் பெண்டிர் தோள் சேர்வும் - தனக்கு ஒப்பாக அன்பில்லாத பெண்டிர் தோளைச் சேர்தலும்—உழந்து விருந்தினன் ஆய் வேறு ஊர் புகலும் - வருந்திப் பிறர்க்கு விருந்தாளியாய் அயலூரிற் புகுதலும்—இம்மூன்றும் அரும் துயரம் காட்டும் நெறி - ஆகிய இம்மூன்றும் ஒருவனுக்கு அரிய துன்பத்தைக் காட்டும் வழிகளாம். எ - று.

விழைவிலாப்பெண்டிர் வேசையர். (ரு)

பிறர்தன்னைப் பேணுங்கா னாணலும் பேணார்
திறன்வேறு கூறிற் பொறையு—மறவினையைக்
காராண்மை போல வொழுகலு மிம்மூன்று
மூராண்மை யென்னுஞ் செருக்கு.

இ - ள். பிறர் தன்னைப் பேணுங்கால் நாணலும் - பிறர் தன்னை உபசரித்துச் சொல்லுமிடத்துத் தான் நாணுதலும்—



பேணார் திறன் வேறு கூறின் பொறையும் - உபசரியாதவராய்த் தனது தகுதி வேறுபடச் சொல்லுமிடத்து அதனைப் பொறுத்தலும்—அறவினையைக் கார் ஆண்மை போல ஒழுகலும் - உபகாரச்செய்கையை மேகம் ஆளுதல்போல ஆளுதல் செய்து நடத்தலும்—இம்மூன்றும் ஊர் ஆண்மை என்னும் செருக்கு - ஆகிய இம்மூன்றும் பிறரின் மேற்பட்டுச் செல்லுகின்ற ஆண்மையென்னுஞ் செல்வங்களாம். எ - று.

மேகமானது பிரதியுபகாரம் வேண்டாது உபகரித்து வருதலின் உவமானமாயிற்று. செருக்கைத்தருஞ் செல்வத்தைச் செருக்கெனலால், ஆகுபெயர். (சு)

வாளைமீ னுள்ள றலைப்படலு மாளல்லான்
செல்வக் குடியுட் பிறத்தலும்—பல்லவையு
ளஞ்சுவான் கற்ற வருநூலு மிம்மூன்றுந்
துஞ்சூமன் கண்ட கனா.

இ - ள். வாளைமீன் உள்ளல் தலைப்படலும் - வாளைமீனை யெடுக்க உள்ளானென்னும் பறவை முயற்சிசெய்தலும்—ஆள் அல்லான் செல்வக் குடியுள் பிறத்தலும் - ஆளமாட்டாதவன் செல்வமுடைய குடியின்கட்பிறந்து அதனை ஆள நினைத்தலும்—பல் அவையுள் அஞ்சுவான் கற்ற அருநூலும் - பலர் கூடிய சபையிலே சென்று அஞ்சுகின்றவன் கற்ற அருமையாகிய நூலுணர்ச்சியும்—இம்மூன்றும் துஞ்சு ஊமன் கண்ட கனா - ஆகிய இம்மூன்றும் உறங்காநின்ற ஊமையானவன் கண்ட கனாப் போல்வனவாம். எ - று.

எப்படி ஊமன் கண்ட கனவானது அவனுள்ளே தோன்றிப் பயன்படாது போமோ அப்படியே தலைப்படல் முதலாகிய மூன்றும் தோன்றிய அந்தந்தப் பொருளிடத்தே பயன்படாது போமென்பதாம். பிறத்தலும் நூலும் ஆகுபெயர்கள். (எ)

தொல்லவையுட் டோன்றுங் குடிமையுந் தொக்கிருந்த
நல்லவையுண் மேம்பட்ட கல்வியும்—வெல்சமத்து
வேந்துவப்ப வட்டார்த்த வென்றியு மிம்மூன்றுந்
தாந்தம்மைக் கூறாப் பொருள்.

இ - ள். தொல் அவையுள் தோன்றும் குடிமையும் - பழையோர் கூடியிருக்கின்ற சபையினிடத்தே தானாக விளங்கித் தோன்றுந் தமது குடிப்பிறப்பும்—தொக்கு இருந்த நல் அவையுள் மேம்பட்ட கல்வியும் - பலவகை நூலோருங் கூடியிருந்த நல்ல சபையிடத்தே தம்மிடத்துத் தானாக மேம்பட்ட கல்வியும்—வெல் சமத்து வேந்து உவப்ப அட்டு ஆர்த்த வென்றியும் - வெல்லும் போரிடத்தே தம்மையாண்ட வேந்தன் மகிழப் பகைவரைக் கொன்று நிறைத்த வெற்றியும்—இம்மூன்றும் தாம தம்மைக் கூறாப்பொருள் - ஆகிய இம்மூன்றும் இவற்றையுடையோர் தம்மைக் குறித்து வியந்து சொல்லப்படாத பொருள்களாம். எ - று.

(அ)

பெருமை யுடையா ரினத்தி னகற
லுரிமையில் பெண்டிரைக் காமுற்று—வாழ்தல்
விழுமிய வல்ல துணிதலிம் மூன்று
முழுமக்கள் காத லவை.

இ - ள். பெருமை உடையார் இனத்தின் அகறல் - பெருந்தன்மையுடையாருடைய இனத்தினீங்குதலும்—உரிமை இல் பெண்டிரைக் காமுற்று வாழ்தல் - தமக்கென உரிமையில்லாத பெண்டிரை இச்சித்து நடத்தலும்—விழுமிய அல்ல துணிதல் - சிறப்புடையவல்லாத காரியங்களைச் செய்யத் துணிதலும்—இம்மூன்றும் முழுமக்கள் காதலவை - ஆகிய இம்மூன்றும் அறிவு நுழைய ஒருபுரையில்லாத மூடர் இச்சிப்பவையாம். எ - று.

"முழுமகன் சிதட னிழுதை மூடன்" என்பது திவாகரம்.



கணக்காய ரில்லாத வூரும் பிணக்கறுக்கு
மூத்தோரை யில்லா வவைக்களனும்—பாத்துண்ணுந்
தன்மையி லாள ரயலிருப்பு மிம்மூன்று
நன்மை பயத்த லில.

இ - ள். கணக்காயர் இல்லாத ஊரும் - ஓதுவிப்பாரை இல்லாத ஊரும்—பிணக்கு அறுக்கும் மூத்தோரை இல்லா அவைக்களனும் - பிணக்கினைக் கெடுக்கும் அறிவுடையோரை இல்லாத சபையும்—பாத்து உண்ணும் தன்மையிலாளர் அயல் இருப்பும் - பகுத்துக் கொடுத்துண்ணுங் குணமில்லாதவர் பக்கத்திலிருப்பும்—இம்மூன்றும் நன்மை பயத்தல் இல - ஆகிய இம்மூன்றும் ஒருவனுக்கு நன்மை தருவனவல்லவாம். எ - று.

பிணக்கு ஒருபொருளைப் பற்றி இருவர்க்கு உளதாமாறுபாடு. பகுத்தல் பிதிரர், தேவர், விருந்தினர், உறவினர், தான் இவர்க்குப் பங்கிடல்.

(கo)

விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும் வீழக்
களியாதான் காவா துரையுந்—தெளியாதான்
கூரையுட் பல்காலுஞ் சேறலு மிம்மூன்று
மூரெல்லா நோவ துடைத்து.

இ - ள். விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும் - தன்னை அழையாதவன் ஆட்டுவிக்குங் கூத்தைத் தான் சென்று காணுதலும்—வீழக் களியாதான் காவாது உரையும் - தளர்ந்து வீழும்படி கள்ளுண்டு களியாதவனாயிருந்துந் தன்னைக்காத்தல் செய்யாது பிறரோடு வழுப்படச் சொல்லுதலும்—தெளியாதான் கூரையுள் பல்காலும் சேறலும் - தன்னை நம்பாதவன் வீட்டிலே பலகாலும் போகுதலும்—இம்மூன்றும் ஊர் எல்லாம் நோவது உடைத்து - ஆகிய இம்மூன்றும் ஊரிலுள்ளோரெல்லாம் அவனை நோவத்தக்க குற்றத்தையுடையதாம். எ - று.

இம்மூன்றும் உடைத்தென்றது கண்ணிரண்டுஞ் சிவந்த தென்பதுபோலப் பன்மை ஒருமையோடு முடிந்தவழுவமைதி. ()

தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன்
வேளாள னென்பான் விருந்திருக்க—வுண்ணுதான்
கோளாள னென்பான் மறவாதா னிம்மூவர்
கேளாக வாழ்த லினிது.

இ - ள். தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன் - முயற்சியுடையனென்று சொல்லப்படுகின்றவன் பிறனிடத்திற் கடன்படாது வாழ்கின்றவன்—வேளாளன் என்பான் விருந்து இருக்க உண்ணுதான் - உபகாரியென்று சொல்லப்படுகின்றவன் விருந்தினரை விட்டுத் தான் புசியாதவன்—கோளாளன் என்பான் மறவாதான் - பிறரறிவித்த காரியங்களை மனத்திற்கொள்ளுதல் வல்லவனென்று சொல்லப்படுகின்றவன் பின்பு அவற்றை மறவாதவன்—இம்மூவர் கேள் ஆகவாழ்தல் இனிது - இம்மூவரையும் தனக்கு நட்பாளராகச் செய்துகொண்டு வாழ்வது ஒருவனுக்கு இன்பத்தைத் தருவதாகும். எ - று.

தாள் முயற்சி. வேளாண்மை உபகாரம். கேள் நட்பு. (கஉ)

சீல மறிவா னிளங்கிளை சாலக்
குடியோம்பல் வல்லா னரசன்—வடுவின்றி
மாண்ட குணத்தான் றவசியென் றிம்மூவர்
யாண்டும் பெறற் கரியார்.

இ - ள். சீலம் அறிவான் இளங்கிளை - பிறருடைய குணத்தையறிந்து அதற்கேற்ப நடக்க வல்லவன் இளமை தொட்டு வந்த சுற்றத்தானவான்—சாலக் குடி ஓம்பல் வல்லான் அரசன் - நிறைவுற்ற குடிகளைக் காப்பாற்றவல்லவன் அரசனவான்—வடு இன்றி மாண்ட குணத்தான் தவசி - குற்றமில்லாமல் மாட்சி



மைப்பட்ட குணத்தையுடையவன் தவசியாவான்—இம்மூவர் யாண்டும் பெறற்கு அரியார் - இம்மூவரும் எவ்விடத்தும் பெறுதற்கரியராவர். எ - று. என்று அசை. (கங)

இழுக்க லியல்பிற் றிளமை பழித்தவை
சொல்லுதல் வற்றாகும் பேதைமை—யாண்டுஞ்
செறுவோடு நிற்குஞ் சிறுமை யிம்மூன்றுங்
குறுகா ரறிவுடை யார்.

இ - ள். இழுக்கல் இயல்பிற்று இளமை - வழுவுதலை இயல்பாகவுடையவர் இளையவர்—பழித்தவை சொல்லுதல் வற்று ஆகும் பேதைமை - அறிவுடையோரால் விலக்கப்பட்டவைகளைச் சொல்ல வல்லவர் பேதையர்—யாண்டும் செறுவோடு நிற்கும் சிறுமை - எக்காலத்தும் கோபகாரியத்தோடு நிற்பவர் சிறியவர்—இம்மூன்றும் அறிவு உடையார் குறுகார் - ஆதலால், இம்மூவகையோரையும் விவேகமுடையவர் கிட்டார். எ - று.

இளமை, பேதைமை, சிறுமை என்னும் இம்மூன்றுகுணச் சொற்களும், அவற்றையுடையோர்க்கு ஆகுதலால், ஆகுபெயர்கள். இழித்தல்பற்றி உயர்திணையை அங்ஙனம் அஃறிணையாக்கிக் கூறினரெனினும் அமையும். (கச)

பொய்வழங்கி வாழும் பொறியறையுங் கைதிரிந்து
தாழ்விடத்து நேர்கருதுந் தட்டையு—மூழினு
லொட்டி வினைநலம் பார்ப்பானு மிம்மூவர்
நட்கப் படாஅ தவர்.

இ - ள். பொய் வழங்கி வாழும் பொறி அறையும் - பொய் சொல்லி வாழுகின்ற திருவில்லாதவனும்—கை திரிந்து தாழ்வு இடத்து நேர்கருதும் தட்டையும் - தன்னின் மிக்கவன் முன்னைப் பதத்தினின்றும் வேறுபட்டுத் தாழ்ந்தவிடத்து அவனைத் தனக்கு நேராக நினைக்கின்ற மூங்கில்போலும் புரைபட்ட மனத்

தவனும்—ஊழினால் ஒட்டி வினை நலம்பார்ப்பானும் - ஒருவனைச் சேருமுறைமையாற் சேர்ந்து அவன் காரியத்திலே தனக்குப் பயன் பார்க்கின்றவனும்—இம்மூவர் நட்கப்படாதவர் - ஆகிய இம்மூவரும் யாவராலும் நட்புக் கொள்ளப்படாதவர். எ - று.

பொறி - இலக்குமி. தட்டை - மூங்கில். ஊழ் - முறைமை. ()

மண்ணின்மேல் வான்புகழ் நட்டானு மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாட் பெற்றானு—முண்ணுநீர்
கூவல் குறைவின்றித் தொட்டானு மிம்மூவர்
சாவா வுடம்பெய்தி னார்.

இ - ள். மண்ணின்மேல் வான் புகழ் நட்டானும் - மண்ணுலகத்திற் பெருமை பொருந்திய புகழை நிறுத்தினவனும்—பெண்ணினுள் மாசு இல் சீர்க் கற்பு உடையாள் பெற்றானும் - பெண்களுட் குற்றமற்ற கீர்த்தியையுங் கற்பையுமுடையவளைத் தனக்கு மனைவியாகப் பெற்றவனும்—உண்ணும் நீர் குறைவு இன்றிக் கூவல் தொட்டானும் - உண்ணப்படுகின்ற நீர் குறைவு படாதபடி கிணறுகளைத் தோண்டி வைத்தவனும்—இம்மூவர் சாவா உடம்பு எய்தினார் - ஆகிய இவர் மூவரும் எக்காலத்தும் இறவாத தேவசரீரம் பெற்றவராவர். எ - று.

பெண்ணினுளென்றது சாதியொருமை. தொடுதல் - தோண்டுதல். துணிவுபற்றி இறந்தகாலத்தாற் கூறினார். (௧௬)

மூப்பின்க ணன்மைக் ககன்றானுங் கற்புடையாட்
பூப்பின்கட் சாராத் தலைமகனும்—வாய்ப்பகையுட்
சொல்வென்றி வேண்டு மிலிங்கியு மிம்மூவர்
கல்விப் புணைகைவிட் டார்.

இ - ள். மூப்பின்கண் நன்மைக்கு அகன்றானும் - மூப்பு வந்தவிடத்துத் துறவறத்திற்கு அஞ்சி நீங்கினவனும்—கற்பு



உடையாள் பூப்பின்கண் சாராத் தலைமகனும்-கற்புடைய மனைவி பூத்து நீராடியவிடத்து அவளைச் சேராத கணவனும்—வாய்ப்பகையுள் சொல் வென்றி வேண்டும் இலிங்கியும் - வாயாற் பகைப்பவருட்சென்று சொல்வெற்றி பெற விரும்புந் தவவேடத்தானும்—இம்மூவர் கல்விப் புணை கைவிட்டார் - ஆகிய இம்மூவரும் பிறவியாகிய கடலைக் கடத்தும் ஞானமாகிய தோணியைக் கைவிட்டவராவர். எ - று.

நன்மை, பகை ஆகுபெயர்கள். பூப்பு மகளிர் சூதகம். (௧௭)

ஒருதலையான் வந்துறூஉ மூப்பும் புணர்ந்தார்க்
கிருதலையு மின்னாப் பிரிவு—முருவினை
யுள்ளுருக்கித் தின்னும் பெரும்பிணியு மிம்மூன்றுங்
கள்வரி னஞ்சப் படும்.

இ - ள். ஒருதலையான் வந்து உறூஉம் மூப்பும் - நிச்சயமாக வந்தடையும் கிழப்பருவமும்—புணர்ந்தார்க்கு இருதலையும் இன்னாப் பிரிவும் - தம்முட் கூடினாரிருவரிடத்துக்கும் துன்பஞ் செய்கின்ற பிரிவும்—உருவினை உள் உருக்கித் தின்னும் பெரும் பிணியும் - உடம்பினை உள்ளுருகச் செய்து தின்னுகின்ற பெருவியாதியும்—இம்மூன்றும் கள்வரின் அஞ்சப் படும் - ஆகிய இம்மூன்றும் திருடர்போல் ஒருவரால் அஞ்சப்படுமவையாம். எ - று.

புணர்ந்தார் தம்முளொத்த அன்பினராய்க் கூடி வாழும் கணவனும் மனைவியும். அன்றி, நட்பாளருக்குமாம். (௧௮)

கொல்யானைக் கோடுங் குணமிலியு மெல்லிற்
பிறன்கடை நின்றொழுகு வானு—மறந்தெரியா
தாடும்பாம் பாட்டு மறிவிலியு மிம்மூவர்
நாடுங்காற் றூங்கு பவர்.

இ - ள். கொல் யானைக்கு ஓடும் குணம் இலியும் - கொலை செய்வதாகிய மதயானைக்கு முன்னோடுகின்ற குணமில்லாதவனும்—எல்லில் பிறன் கடை நின்று ஒழுகுவானும் - இரவிலே பிறன் வீட்டு வாயிலிற் சென்று அவன் மனையாளை இச்சித்து நின்று நடக்கின்றவனும்—மறம் தெரியாது ஆடும் பாம்பு ஆட்டும் அறிவு இலியும் - கொலைசெய்யுமென்பதை அறியாது ஆடும் பாம்பினை ஆட்டும் அறிவில்லாதவனும்—இம்மூவர் நாடுங்கால் தூங்குபவர் - ஆகிய இம்மூவரும் ஆராய்ந்து பார்க்குமிடத்து அவற்றால் இறப்பவராவர். எ - று.

மனையாளென்பது வருவிக்கப்பட்டது. மறம் - கொலை. (கக)

**ஆசை பிறன்கட் படுதலும் பாசம்**
**பசிப்ப மடியைக் கொளலுங்—கதித்தொருவன்**
**கல்லானென் றெள்ளப் படுதலு மிம்மூன்று**
**மெல்லார்க்கு மின்னா தன.**

இ - ள். பிறன்கண் ஆசைப் படுதலும் - பிறனொருவனிடத்துள்ள பொருளுக்கு ஆசைப் படுதலும்—பாசம் பசிப்ப மடியைக் கொளலும் - தன்சுற்றம் பசித்திருக்கத் தான் சோம்பலைக் கொள்ளுதலும்—கதித்து ஒருவன் கல்லான் என்று எள்ளப்படுதலும் - கோபித்து ஒருவனாற் கற்றிலனென்று இகழப்படுதலும் - இம்மூன்றும் எல்லார்க்கும் இன்னாதன - ஆகிய இம்மூன்றும் எல்லார்க்கும் இன்பந் தராதவையாம். எ - று.

மடி - சோம்பு. கதித்தல் - கோபித்தல். பொருள் அவாய் நிலையால் வருவிக்கப்பட்டது. (உ0)

**வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்**
**செய்தவை நாடாச் சிறப்புடைமை—யெய்தப்**
**பலநாடி நல்லவை கற்ற லிம்மூன்று**
**நலமாட்சி நல்லவர் கோள்.**



இ - ள். வருவாயுள் கால் வழங்கி வாழ்தல் - தமக்கு வரும் பொருள்களிலே நாலிலொருபங்கு தருமத்திற் செலவுசெய்து வாழ்தலும்—செரு வாய்ப்பச் செய்தவை நாடாச் சிறப்பு உடைமை - போரினிடத்து வெற்றிகிடைக்கத் தான்செய்த காரியங்கள் ஆராயாதபடி யாவர்க்கும் விளங்கித் தோன்றுஞ் சிறப்புடையனாதலும்—எய்தப் பல நாடி நல்லவை கற்றல் - நிரம்பப் பலவற்றையும் ஆராய்ந்து அவற்றுள் நல்லவைகளைக் கற்றலும்—இம்மூன்றும் நலமாட்சி நல்லவர் கோள் - ஆகிய இம்மூன்றும் நற்குண நற்செய்கைகளாற் பெருமை பெற்ற நல்லவருடைய கொள்கைகளாம். எ - று.

தன்னனுபவத்திற்கு இரண்டு பங்கும், ஆஸ்திக்கு ஒருபங்கும், அறத்திற்கு ஒரு பங்குமாகப் பங்கிட்டு வைக்கவேண்டுமென்று பொருணூலிலே சொல்லுதலால், அறத்துக்கு நாலிலொருபங்கு சொல்லப்பட்டது. (உக)

**பற்றென்னும் பாசத் தளையும் பலவழியும்**
**பற்றறா தோடு மவாத்தேருந்—தெற்றெனப்**
**பொய்த்துரை யென்னும் பகையிருளு மிம்மூன்றும்**
**வித்தற வீடும் பிறப்பு.**

இ - ள். பற்று என்னும் பாசத் தளையும் - பற்றென்று சொல்லப்படுகின்ற கயிற்று விலங்கும்—பல வழியும் பற்று அறாது ஓடும் அவாத் தேரும் - பலபொருள்களினும் பிடிப்பு நீங்காமல் ஓடும் ஆசையாகிய தேரும்—தெற்றெனப் பொய்த்து உரை என்னும் பகை இருளும் - தெளிவாகப் பிறர்க்குப் பொய்த்துச் சொல்லுஞ் சொல்லாகிய பகைக்கின்ற அந்தகாரமும்—இம்மூன்றும் வித்து அறப் பிறப்பு வீடும் - ஆகிய இம்மூன்றும் பிறவிக்கு வித்து; அவை கெடப் பிறப்பு ஒழியும். எ - று.

பற்றாவன நான், எனது என்பன. (உஉ)

தானங் கொடுக்குந் தகைமையு மானத்தார்
குற்றங் கடிந்த வொழுக்கமுந்—தெற்றெனப்
பல்பொரு ணீங்கிய சிந்தையு மிம்மூன்று
நல்வினை யார்க்குங் கயிறு.

இ - ள். தானம் கொடுக்கும் தகைமையும் - பிறர்க்குத் தானமாகப் பொருள் கொடுக்குங் குணமும்—மானத்தார் குற்றம் கடிந்த ஒழுக்கமும் - மானமுடையாரது குற்றத்தை நீக்கிய ஒழுக்கமும்—தெற்றெனப் பல் பொருள் நீங்கிய சிந்தையும் - தெளியப் பலபொருள்களினுஞ் செல்லுதலொழிந்த நினைவும்—இம்மூன்றும் நல்வினை ஆர்க்கும் கயிறு - ஆகிய இம்மூன்றும் ஒருவனுக்கு நல்வினை தன்னைவிட்டகலாதிருக்கும்படிக்குக் கட்டுகின்ற கயிறாம். எ - று.

தெற்றெனல் தெளிவாதல். (உ௩)

காண்டகு மென்றோட் கணிகைவா யின்சொல்லுந்
தூண்டிலி னுட்பொதிந்த தேரையு—மாண்டசீர்க்
காழ்த்த பகைவர் வணக்கமு மிம்மூன்று
மாழ்ச்சிப் படுக்கு மளறு.

இ - ள். காண் தகு மெல் தோள் கணிகை வாய் இன்சொல்லும் - காணத்தக்க மெல்லிய தோள்களையுடைய வேசையினுடைய வாயிற்பிறக்கின்ற இனிய சொல்லும்—தூண்டிலினுள் பொதிந்த தேரையும் - தூண்டிலினிடத்தே மீனுக்கு இரையாக அதன்முள்ளை மறைத்து வைக்கப்பட்ட தேரையும்—காழ்த்த பகைவர் மாண்டசீர் வணக்கமும் - வைரம்பற்றிய சத்துருக்களுடைய மாட்சிமைப்பட்ட சீரையுடைய வணக்கமும்—இம்மூன்றும் ஆழ்ச்சிப்படுக்கும் அளறு - ஆகிய இம்மூன்றும் உயிர்களைத் தம்முள்ளே அழுந்தப் பண்ணுகின்ற நரகங்கள் போல்வனவாம். எ - று.



பொதிதல் - மூடுதல். காழ்த்தல் - வைரமுறுதல். (உ௪)

செருக்கினால் வாழுஞ் சிறியவனும் பைத்தகன்ற
வல்குல் விலைபகரு மாய்தொடியு—நல்லவர்க்கு
வைத்த வறப்புறங் கொன்றானு மிம்மூவர்
கைத்துண்ணார் கற்றறிந் தார்.

இ - ள். செருக்கினால் வாழும் சிறியவனும் - உள்ளக்களிப்பால் முறை கெடச்செய்து வாழுகின்ற அற்பனும்—பைத்து அகன்ற அல்குல் விலை பகரும் ஆய் தொடியும் - படம்போன்று அகன்ற அல்குலை விலைக்கு விற்கின்ற வேசையும்—நல்லவர்க்கு வைத்த அறப்புறம் கொன்றானும் - நல்ல அருந்தவர்க்கு வைத்த அறச்சாலையை அழித்தவனும்—இம்மூவர் கைத்து உண்ணார் கற்று அறிந்தார் - ஆகிய இம்மூவருடைய பொருள்களைக் கொண்டு சீவனஞ்செய்யார் அறநூலைக் கற்று அதன்பொருளை அறிந்தவர். எ - று.

ஆய்தொடி ஆராய்ந்த வளையலையுடையாள். கைத்து - பொருள். (உ௫)

ஒல்வ தறியும் விருந்தினனு மாருயிரைக்
கொல்வ திடைநீக்கி வாழ்வானும்—வல்லிதிற்
சீல மினிதுடைய வாசானு மிம்மூவர்
ஞால மெனப்படு வார்.

இ - ள். ஒல்வது அறியும் விருந்தினனும் - ஒருவனுக்கு இயன்றதனை அறிந்து பெற்றதனால் இன்பத்தையடையும் அதிதியும்—ஆர் உயிரைக் கொல்வது இடைநீக்கி வாழ்வானும் - அரிய சீவனைப் பிறர் கொல்வதனை நடுவே நீக்கி வாழ்பவனும்—வல்லிதின் சீலம் இனிது உடைய ஆசானும் - உறுதியாக மேற்கொண்ட ஒழுக்கத்தினை இனிதாகவுடைய ஆசாரியனும்—இம்

மூவர் ஞாலம் எனப்படுவார் - ஆகிய இம்மூவரும் உயர்ந்தோ ரென்று சொல்லப்படுவர். எ - று.

"உலக மென்ப துயர்ந்தோர் மாட்டே" என்பது திவாகர மாதலின், ஞாலமென்பது உயர்ந்தோரெனப்பட்டது. (உசு)

உண்பொழுது நீராடி யுண்டலு மென்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலுந்—தோல்வற்றிச்
சாயினுஞ் சான்றாண்மை குன்றாமை யிம்மூன்றுந்
தூஉய மென்பார் தொழில்.

இ - ள். உண்பொழுது நீர் ஆடி உண்டலும் - உண்ணும் பொழுது ஸ்நானம்பண்ணி உண்ணுதலும்—என் பெறினும் பால்பற்றிச் சொல்லா விடுதலும் - யாது பயன் பெறுவதாயினும் ஒரு பக்ஷத்தைப் பற்றிச் சொல்லாதிருத்தலும்—தோல் வற்றிச் சாயினும் சான்றாண்மை குன்றாமை - பசியால் உடம்பு வற்றி யிறத்தல் சமீபித்தவிடத்தும் தன்பெருமை குறையாமல் நடத்தலும்—இம்மூன்றும் தூயம் என்பார் தொழில் - ஆகிய இம்மூன்றும் மனமொழிமெய்களால் யாம் பரிசுத்தராகக் கடவோமென்று நினைப்பவருடைய செய்கைகளாம். எ - று. (உஎ)

வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கு நோன்பிலியு
மில்லது காமுற் றிருப்பானுங்—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவ
ருமிக்குத்திக் கைவருந்து வார்.

இ - ள். வெல்வது வேண்டி வெகுண்டு உரைக்கும் நோன்பு இலியும் - சொல்வெற்றியை விரும்பிப் பிறனோடு கோபித்துச் சொல்கின்ற தவமில்லாதவனும்—இல்லது காமுற்று இருப்பானும் - தனக்குக் கிடைத்தற்கரிய பொருளைப் பெற ஆசைப் பட்டிருக்கின்றவனும்—கல்வி செவிக்குற்றம் பார்த்து இருப்பானும் - பிறன் கற்ற கல்வியைச் செவியினாலே குற்றம்பார்த்



திருக்கின்றவனும்—இம்மூவர் உமிக் குத்திக் கைவருந்துவார் - ஆகிய இம்மூவரும் உமியைக் குத்திக் கைவருந்துகின்றவரோ டொப்பாவார். எ - று.

செவி - கேள்வி. சிறிதும் பயனடையாது துன்பப்படுவ ரென்பது கருத்து. (உஅ)

பெண்விழைந்து பின்செலினுந் தன்செலவிற் குன்றாமை
கண்விழைந்து கையுறினுங் காதல்—பொருட்கின்மை
மண்விழைந்து வாழ்நாண் மதியாமை யிம்மூன்று
நுண்விழைந்த நூலவர் நோக்கு.

இ - ள். பெண் விழைந்து பின் செலினும் தன் செலவில் குன்றாமை - ஒரு பெண் தன்னை விரும்பிப் பின்சென்றாலும் தன்னடக்கையிற் குறையாமையும்—கண் விழைந்து கை உறினும் பொருட்குக் காதல் இன்மை - தன்னிடந்தேடி வந்து கைப்பட்டாலும் அப்பொருளிடத்தே ஆசையில்லாமையும்—மண் விழைந்து வாழ் நாள் மதியாமை - மண்ணாட்சியை விரும்பி வாழ்நாள் நேரிட்டவிடத்து அதனை மதியாமையும்—இம்மூன்றும் நுண் விழைந்த நூலவர் நோக்கு - ஆகிய இம்மூன்றும் நுட்பமான பொருளை விரும்பிய நூலறிவுடையவர் கருத்தாம். எ - று.

பெண் பொன் மண் மூன்றாசையும் முத்தியை விரும்பினவர் கொள்ளாரென்பது. (உகூ)

தன்னச்சிச் சென்றாரை யெள்ளா வொருவனு
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு—நீத்தானு
மென்று மழுக்கா றிகந்தானு மிம்மூவர்
நின்ற புகழுடை யார்.

இ - ள். தன் நச்சிச் சென்றாரை எள்ளா ஒருவனும்-தன்னை விரும்பி அடைந்த இரவலரை இகழாத ஒப்பற்றவனும்—மன்

ளிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும் - நிலையான செல்வம் பெற்ற காலத்து மறதியை விட்டவனும்—என்றும் அழுக்காறு இகந்தானும் - எப்போதும் பிறர் செல்வங்கண்டு பொறாமை நீங்கினவனும்—இம்மூவர் நின்ற புகழ் உடையார் - ஆகிய இம் மூவரும் நிலைபெற்ற புகழையுடையராவர். எ - று. நச்சல் - விரும்பல். (௩௰)

பல்லவையு ணல்லவை கற்றலும் பாத்துண்டாங்
கில்லற முட்டா தியற்றலும்—வல்லிதிற்
றாளி னொருபொரு ளாக்கலு மிம்மூன்றுங்
கேள்வியு ளெல்லாந் தலை.

இ - ள். பல் அவையுள் நல்லவை கற்றலும் - பல சபைகளுள்ளும் நல்லனவென்று சொல்லப்படுமவைகளைக் கற்றலும்—பாத்து உண்டு ஆங்கு இல் அறம் முட்டாது இயற்றலும் - பகுத்துண்டு இல்லறத்தைக் குறையுறாமல் நடத்துதலும்—வல்லிதின் தாளின் ஒருபொருள் ஆக்கலும் - தன்வல்லமையாலும் முயற்சியினாலும் யாதானுமொருபொருளை உண்டாக்குதலும்—இம்மூன்றும் கேள்வியுள் எல்லாம் தலை - ஆகிய இம் மூன்றும் கேட்கப்பட்ட செயல் பலவினும் தலைமையாகிய செயல்களாம். எ - று.

ஆங்கு அசை. முட்டு - தடை. பொருள் - விஷயம். (௩௧)

நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலு நூற்கேலா
வெண்மொழி வேண்டினுஞ் சொல்லாமை---நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லலு மிம்மூன்றுங்
கற்றறிந்தார் பூண்ட கடன்.

இ - ள். மொழி நோக்கி நுண் பொருள் கொளலும் - நூல்களிலே பதங்களை ஆராய்ந்து நுட்பமாகிய பொருள்களைக் கொள்ளுதலும்—நூற்கு ஏலா வெண் மொழி வேண்டினும் சொல்லாமை - நூல்களுக்குத் தகாத வெளிப்படையாகிய சொல்லைப் பிறர் வேண்டினாலும் சொல்லாதொழிதலும்—நல் மொழியைச் சிற்றினம் அல்லார்கண் சொல்லலும் - உயிர்க்கு உறுதியைத் தரும் நல்ல சொற்களைக் கீழ்க்குலமாகாதவரிடத்துச் சொல்லுதலும்—இம்மூன்றும் கற்று அறிந்தார் பூண்ட கடன் - ஆகிய இம்மூன்றும் பலநூல்களையுங் கற்றறிந்தார் பூண்ட கடமையாம். எ - று.



சிறுமை - கீழ்மை. இனம் - குலம். (௩௨)

கோலஞ்சி வாழுங் குடியுங் குடிதழீஇ
யாலம்வீழ் போலு மமைச்சனும்—வேலின்
கடைமணிபோற் றிண்ணியான் காப்புமிம் மூன்றும்
படைவேந்தன் பற்று விடல்.

இ - ள். கோல் அஞ்சி வாழும் குடியும் - தன் செங்கோலுக்குப் பயந்து வாழாநின்ற குடியும்—குடி தழீஇ ஆலம் வீழ் போலும் அமைச்சனும் - குடிகளைத் தழுவி ஆலம் விழுதுபோலத் தாங்க வல்ல மந்திரியும்—வேலின் கடை மணிபோல் திண்ணியான் காப்பும் - வேலினிடத்துப் பூண்போலத் திட்பமுடையவனது காவலும்—இம்மூன்றும் படைவேந்தன் பற்று விடல் - ஆகிய இம்மூன்றையும் சேனையையுடைய அரசன் பற்றுவிடாதொழிக. எ - று. (௩௩)

மூன்று கடன்கழித்த பார்ப்பானு மோர்ந்து
முறைநிலை கோடா வரசுஞ்—சிறைநின்
றலவலை யில்லாக் குடியுமிம் மூவ
ருலக மெனப்படு வார்.

இ - ள். மூன்று கடன் கழித்த பார்ப்பானும் - மூன்று வகைப்பட்ட கடன்களையுந்தீர்த்த பிராமணனும்—ஓர்ந்து முறை நிலை கோடா அரசும் - தருமநூலை ஆராய்ந்து நீதிநிலையின்

மாறுபடாத அரசனும்—சிறை நின்று அலவலை இல்லாக் குடியும் - அவ்வரசனுற் செய்யப்பட்ட சிறையினுட்பட்டுப் புலம்புதலில்லாத குடியும்—இம்மூவர் உலகம் எனப்படுவார் - ஆகிய இம்மூவரும் உயர்ந்தோரென்று சொல்லப்படுவார். எ - று.

மூன்றுவகைப்பட்ட கடனுவன தேவர் முனிவர் தென்புலத்தார் ஆகிய மூவர்க்கும் முறையே செய்யப்படும் வேள்வியும், வேதமோதலும், மகப்பெறுதலுமாம். அலவலை - புலம்பல். உலகம் - உயர்ந்தோர். (௩௪)

முந்நீர்த் திரையி னெழுந்தியங்கா மேதையு
நுண்ணூற் பெருங்கேள்வி நூற்கரை—கண்டானு
மைந்நீர்மை யின்றி மயலறுப்பா னிம்மூவர்
மெய்ந்நீர்மை மேனிற் பவர்.

இ - ள். முந்நீர்த் திரையின் எழுந்து இயங்கா மேதையும் - சமுத்திரத்தின் அலைபோல் எழுந்து மனமலையாத அறிவையுடையவனும்—நுண் நூல் பெரும் கேள்வி நூல் கரை கண்டானும் - நுட்பமாகிய சிந்தனைகளாலும் மிகுதியாகிய கேள்விகளினுலும் நூல்களின் முடிவைக் கண்டவனும்—மைந்நீர்மை இன்றி மயல் அறுப்பான் - குற்றமாகிய குணத்தன்மையில்லாதபடி ஆசாபாசத்தை அறுப்பவனும்—இம்மூவர் மெய்ந்நீர்மை மேல் நிற்பவர் - ஆகிய இம்மூவரும் மெய்ம்மைக் குணத்தையுடைய மோக்ஷத்திலே நிற்பவராவர். எ - று.

நூல் - சிந்தனை. குற்றம், காமம் வெகுளி மயக்கம். எண்ணும்மை அறுப்பானென்பதனோடுங் கூட்டப்பட்டது. (௩௫)

ஊனுண் டுயிர்கட் கருளுடையே மென்பானுந்
தானுடன்பா டின்றி வினையாக்கு—மென்பானுங்
காமுறு வேள்வியிற் கொல்வானு மிம்மூவர்
தாமறிவர் தாங்கண்ட வாறு.



இ - ள். ஊன் உண்டு உயிர்கட்கு அருள் உடையேம் என்பானும் - ஒன்றினது மாமிசத்தைத் தின்றுவைத்து உயிர்களினிடத்து அருளுடையோமென்கின்றவனும்—தான் உடன்பாடு இன்றி வினை ஆக்கும் என்பானும் - தான் யாதொரு காரிய முயற்சிக்கும் உடன்படாமல் எல்லாம் ஊழ் செய்யுமென்கின்றவனும்—காமுறு வேள்வியில் கொல்வானும் - காமியத்தைத் தருவதாகிய யாகத்தில் ஒரு பிராணியைக் கொல்லுகின்றவனும்—இம்மூவர் தாம் கண்டவாறு தாம் அறிவர் - ஆகிய இம்மூவரும் தாங்களறிந்தபடியே தாங்கள் அறிவார்கள். எ - று.

பெரியோர் நூலின் கருத்தையறியாரென்பதாயிற்று. (௩௬)

குறளையு ணட்பளவு தோன்று முறலினிய
சால்பினிற் றோன்றுங் குடிமையும்—பால்போலுந்
தூய்மையுட் டோன்றும் பிரமாண மிம்மூன்றும்
வாய்மை யுடையார் வழக்கு.

இ - ள். குறளையுள் நட்பு அளவு தோன்றும் - ஒருவனுக்கு வந்த செல்வச்சுருக்கத்தினுல் சினேகிதனுடைய சினேகத்தின் மிகுதியானது காணப்படும்—உறல் இனிய சால்பினில் குடிமை தோன்றும் - சேர்தற்கு இனிதாகிய நற்குணங்களினது நிறைவினுலே குடிப்பிறப்பானது காணப்படும்—பால்போலும் தூய்மையுள் பிரமாணம் தோன்றும் - பால்போலும் பரிசுத்தகுணமுடைமையினுலே ஒருவனது நிலையானது காணப்படும்—இம்மூன்றும் வாய்மை உடையார் வழக்கு - இந்நட்பளவு முதலாகிய மூன்றும் மெய்ம்மையுடையாரது ஒழுக்கங்களாம். எ - று.

உள்ளென்பன விரண்டும் உருபுமயக்கம். உம்மை அசைநிலை.

தன்னை வியந்து தருக்கலுந் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலு—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையு மிம்மூன்றுஞ்
செல்வ முடைக்கும் படை.

இ - ள். தன்னை வியந்து தருக்கலும் - தன்னைத் தானே மெச்சிக்கொண்டு அகங்கரித்தலும்—தாழ்வு இன்றிக் கொன்னே வெகுளி பெருக்கலும் - அடக்கமில்லாமல் வீணாகக் கோபத்தை வளர்த்தலும்—முன்னிய பல்பொருள் வெஃகும் சிறுமையும் - முற்பட்ட பிறருடைய பலவகைப்பொருள்களையும் இச்சிக்கின்ற அற்பகுணமும்—இம்மூன்றும் செல்வம் உடைக்கும் படை - ஆகிய இம்மூன்றும் ஒருவனுக்குச் செல்வத்தை அழிக்கின்ற ஆயுதங்களாம். எ - று.

தருக்கு - அகங்காரம். முன்னியவென்றது முன்னென்னு மிடைச்சொலடியாகப் பிறந்த பெயரெச்சம். (௩௮)

**புலைமயக்கம் வேண்டிப் பொருட்பெண்டீர்த் தோய்தல்**
**கலைமயக்கங் கள்ளுண்டு வாழ்தல்—சொலைமுனிந்து**
**பொய்மயக் கஞ்சூதின் கட்டங்க ளிம்மூன்று**
**நன்மையி லாளர் தொழில்.**

இ - ள். புலை மயக்கம் பொருட் பெண்டீர் வேண்டித் தோய்தல் - நீசத்தன்மையோடு கலத்தலாவது வேசையரை விரும்பிக் கூடுதலாம்—கலமயக்கம் கள் உண்டு வாழ்தல் - பிறரெச்சிற்கலத்தோடு கலத்தலாவது கள்ளுண்டு வாழ்தலாம்—சொலை முனிந்து பொய்ம்மயக்கம் சூதின்கண் தங்கல் - பெரியோர் சொல்லைக் கடந்து பொய்யோடு கலத்தலாவது சூதாடுமிடங்களிலே பலகாலும் தங்குதலாம்—இம்மூன்றும் நன்மையிலாளர் தொழில் - இம்மூன்றும் நன்மையில்லாதார் தொழில்களாம். எ - று.

நன்மை - அறம். இங்கே வாழ்தலென்றது குறிப்பாற் கெடுதலையுணர்த்திநின்றது. (௩௯)



**வெகுளி நுணுக்கும் விறலு மகளிர்கட்**
**கொத்த வொழுக்க முடைமையும்—பாத்துண்ணு**
**நல்லறி வாண்மை தலைப்படலு மிம்மூன்றுந்**
**தொல்லறி வாளர் தொழில்.**

இ - ள். வெகுளி நுணுக்கும் விறலும் - மனசிலுண்டாகிய கோபத்தைச் சுருக்கும் வல்லமையும்—மகளிர்கட்கு ஒத்த ஒழுக்கம் உடைமையும் - பெண்டீர்களுக்குப் பொருந்துமொழுக்கமுடையனாதலும்—பாத்து உண்ணும் நல் அறிவாண்மை தலைப்படலும் - பகுத்துண்ணும் நல்லறிவுடைமையைக் கூடுதலும்—இம்மூன்றும் தொல் அறிவாளர் தொழில் - ஆகிய இம்மூன்றும் இயற்கையறிவினையுடையவரது தொழில்களாம். எ - று. (௪0)

**அலந்தார்க்கொன் றீந்த புகழுந் துளங்கினுந்**
**தன்குடிமை குன்றாத் தகைமையு—மன்போடி**
**நாணாளு நட்டார்ப் பெருக்கலு மிம்மூன்றுங்**
**கேள்வியு ளெல்லாந் தலை.**

இ - ள். அலந்தார்க்கு ஒன்று ஈந்த புகழும் - வறுமையினாலே துன்பப்பட்டு இரந்தவர்களுக்கு அவர் விரும்பிய ஒன்றைக் கொடுத்தலாலுண்டாகிய புகழும்—துளங்கினும் தன் குடிமை குன்றாத தகைமையும் - வறுமை முதலியவற்றால் வருந்தினும் தன் குடிப்பிறப்புக்குத் தக்க ஒழுக்கங் குன்றாதபடி நடந்துகொள்ளும் பெருமையும்—அன்பு ஓடி நாள் நாளும் நட்டார்ப் பெருக்கலும் - அன்பு வளர்ந்து நாடோறுஞ் சினேகித்தவரை ஓங்கச் செய்தலும்—இம்மூன்றும் கேள்வியுள் எல்லாம் தலை - ஆகிய இம்மூன்றும் பெரியோரிடத்துத் தான் கேட்கப்படும் அறங்கள் பலவினும் தலைமையான அறங்களாம். எ-று.

கேள்வி - ஆகுபெயர். (௪௧)

கழகத்தால் வந்த பொருள்கா முறாமை
பழகினும் பார்ப்பாரைத் தீப்போ—லொழுக
லுழவின்கட் காமுற்று வாழ்தலிம் மூன்று
மழகென்ப வேளாண் குடிக்கு.

இ - ள். கழகத்தால் வந்த பொருள் காமுறாமை - சூதாட்டத்தினால் வருகின்ற பொருளை இச்சியாமையும்—பழகினும் பார்ப்பாரைத் தீப்போல் ஒழுகல் - பலகாலும் பழகினாலும் பிராமணரை அக்கினிக்குச் சமானராக நினைத்து அஞ்சி நடந்துகொள்ளுதலும்—உழவின்கண் காமுற்று வாழ்தல் - பயிர் செய்தலில் ஆசையுற்று வாழ்தலும்—இம்மூன்றும் வேளாண் குடிக்கு அழகு என்ப - ஆகிய இம்மூன்றும் வேளாண்மையையுடைய குலத்துக்கு அழகென்று சொல்வார் பெரியோர். எ - று.

எண்ணும்மை விகாரத்தாற்றொக்கன. கழகமென்னுஞ் சூதாடிடத்தின் பெயர் சூதுக்கு ஆகுதலால் ஆகுபெயர். (௪௨)

வாயி னடங்குத றுப்புரவா மாசற்ற
செய்கை யடங்குத றிப்பியமாம்—பொய்யின்றி
நெஞ்ச மடங்குதல் வீடாகு மிம்மூன்றும்
வஞ்சத்திற் றீர்ந்த பொருள்.

இ - ள். வாயின் அடங்குதல் துப்புரவு ஆம் - வாக்கினால் அடங்குதல் இகத்திலே செல்வத்தைத் தருவதாகும்—செய்கை அடங்குதல் மாசு அற்ற திப்பியம் ஆம் - சரீரத்தொழிலால் அடங்குதல் மறுமையிலே குற்றமற்ற தெய்வப்பிறப்பைத் தருவதாகும்—பொய் இன்றி நெஞ்சம் அடங்குதல் வீடு ஆகும் - பொய் இல்லாமல் மனத்தால் அடங்குதல் முடிவிலே முத்தியைத் தருவதாகும்—இம்மூன்றும் வஞ்சத்தின் தீர்ந்த பொருள் - இம்மூன்றும் பொய்யினின்றும் நீங்கிய நற்பொருள்களாம். எ - று.

துப்புரவு அநுபவிக்கப்படுவது. (௪௩)



விருந்தின்றி யுண்ட பகலுந் திருந்திழையார்
புல்லப் புடைபெயராக் கங்குலு—மில்லார்க்கொன்
றீயா தொழிந்தகன்ற காலையு மிம்மூன்றும்
நோயே யுரனுடையார்க் கு.

இ - ள். விருந்து இன்றி உண்ட பகலும் - விருந்தில்லையாகப் புசிக்கக் கழிந்த பகலும்—திருந்து இழையார் புல்லப் புடை பெயராக் கங்குலும் - திருந்திய ஆபரணங்களையுடைய பெண்களை அநுபவிக்கக் கழியாத இராத்திரியும்—இல்லார்க்கு ஒன்று ஈயாது ஒழிந்து அகன்றகாலையும் - தரித்திரர்க்கு ஒன்றைக் கொடாதிருக்கக் கழிந்த நாளும்—இம்மூன்றும் உரன் உடையார்க்கு நோயே - ஆகிய இவை மூன்றும் அறிவுடையார்க்கு நினைக்குந்தோறும் நோய்களாம். எ - று.

உரன்-அறிவு. "உரனே காட்சி யுணர்வே யுண்மை—புலனே ஞான மறிவெனப் புகல்வர்" என்பது திவாகரம். (௪௪)

ஆற்றானை யாற்றென் றலைப்பானு மன்பின்றி
யேற்றார்க் கியைவ கரப்பானுங்—கூற்றம்
வரவுண்மை சிந்தியா தானுமிம் மூவர்
நிரயத்துச் சென்றுவீழ் வார்.

இ - ள். ஆற்றானை ஆற்று என்று அலைப்பானும் - ஒருகாரியஞ் செய்தற்குச் சத்தியில்லாதவனை அதைச் செய்யச் சொல்லி வருத்துகின்றவனும்—ஏற்றார்க்கு அன்பு இன்றி இயைவ கரப்பானும் - யாசித்தவர்களிடத்தில் அன்பில்லாது தனக்கிசைந்த பொருள்களைக் கொடாது ஒளிக்கின்றவனும்—கூற்றம் வரவு உண்மை சிந்தியாதானும் - யமன் வருவது உண்மையென்று நினையாதவனும்—இம்மூவர் நிரயத்துச்சென்று வீழ்வார் - ஆகிய இம்மூவரும் நரகத்திற்போய் விழுவார். எ - று. (௪௫)

காறாய்மை யில்லாக் கலிமாவுங் காழ்கடிந்து
மேறாய்மை யில்லாத வெல்களிறுஞ்—சீறிக்
கறுவி வெகுண்டுரைப்பான் பள்ளியிம் மூன்றுங்
குறுகா ரறிவுடை யார்.

இ - ள். கால் தூய்மை இல்லாக் கலிமாவும் - நடையிலே நன்மையில்லாத செழிய குதிரையும்—காழ் கடிந்து மேல் தூய்மை இல்லாத வெல் களிறும் - கட்டுத்தறியை முறிக்கும் வலிமையுடைத்தாயும் மேலிருப்பதற்கு ஏற்ற நன்மையில்லாத வெற்றியையுடைய யானையும்—சீறிக் கறுவி வெகுண்டு உரைப்பான் பள்ளி - சீறி உள்வைரங்கொண்டு கோபிப்பவனுடைய கல்விச்சாலையும்—இம்மூன்றும் குறுகார் அறிவு உடையார் - ஆகிய இம்மூன்றனையும் விவேகமுடையவர் சேரார். எ - று. கால், காழ் ஆகுபெயர்கள். (சசு)

சில்சொற் பெருந்தோண் மகளிரும் பல்வகையுந்
தாளினாற் றந்த விழுநிதியு—நாடோறு
நாத்தளிர்ப்ப வாக்கிய வுண்டியு மிம்மூன்றுங்
காப்பிகழ லாகாப் பொருள்.

இ - ள். சில் சொல் பெரும் தோள் மகளிரும் - மெல்லிய சொல்லையும் பெரிய தோள்களையுமுடைய பெண்டிரும்—பல் வகையும் தாளினால் தந்த விழுநிதியும் - பலவகையாலும் முயற்சியாற் றேடிய சிறந்த பொருளும்—நாடோறும் நாத்தளிர்ப்ப ஆக்கிய உண்டியும் - எப்போதும் நாவானது மகிழும்படி சமைத்த உணவும்—இம்மூன்றும் காப்பு இகழல் ஆகாப்பொருள் - ஆகிய இம்மூன்றும் காத்தலைத் தள்ளக்கூடாத பொருள்களாம். எ - று.

தாள் - முயற்சி. மிகுதிபற்றி உயர்திணை அஃறிணையாக முடிந்தது. காப்பாற்றாவிடிற் பழுதுபடுமென்பதாம். (சஎ)



வைததனை யின்சொல்லாக் கொள்வானு நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானு—மூறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்.

இ - ள். வைததனை இன் சொல்லாக் கொள்வானும் - ஒருவன் வைத வசைகளை இனியசொல்லாகக் கொள்கின்றவனும்—நெய் பெய்த சோறு என்று கூழை மதிப்பானும் - நெய்வார்த்த சோறென்று தான் பெற்ற கூழை மதிக்கின்றவனும்—ஊறிய கைப்பதனைக் கட்டி என்று உண்பானும் - மிகுந்த கைப்புடையதாகிய ஒருணவைவெல்லமென்று உண்கின்றவனும்—இம்மூவர் மெய்ப்பொருள் கண்டு வாழ்வார் - ஆகிய இம்மூவரும் தத்துவப் பொருளை அறிந்து வாழப்பெறுவார். எ - று.

கட்டி - வெல்லம். மெய்ப்பொருள் - கடவுள். கூழ் - மாவினாற் சமைக்கப்பட்டது. (சஅ)

ஏவாது மாற்று மிளங்கிளையுங் காவாது
வைதெள்ளிச் சொல்லுந் தலைமகனும்—பொய்தெள்ளி
யம்மனை தேய்க்கு மனையாளு மிம்மூவ
ரிம்மைக் குறுதியில் லார்.

இ - ள். ஏவாதும் ஆற்றும் இளங்கிளையும் - ஏவாத காரியத்தையும் செய்கின்ற தன்னிளஞ்சுற்றத்தானும் — காவாது வைது எள்ளிச் சொல்லும் தலைமகனும் - மனைவியைப் பாதுகாவாது வைது இகழ்ந்து பேசுகின்ற தலைவனும்—பொய் தெள்ளி அம்மனை தேய்க்கும் மனையாளும் - பொய்யையே தெளிந்து தான் வாழ்கின்ற வீட்டிலுள்ள பொருளை அழிக்கும் மனைவியும்—இம்மூவர் இம்மைக்கு உறுதி இல்லார் - ஆகிய இம்மூவரும் இப்பிறப்பில் ஒருவற்கு உறுதியில்லாதவராவார். எ - று.

எச்சவும்மையால் ஏவியதைச் செய்யாமையேயன்றி யெனப் பொருள் கொள்க. உறுதி - நன்மை. (சக)

கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனு
முள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரு
மில்லிருந் தெல்லை கடப்பாளு மிம்மூவர்
வல்லே மழையருக்குங் கோள்.

இ - ள். கொள் பொருள் வெஃகிக் குடி அலைக்கும் வேந்தனும் - தான் கொள்ளும் பொருளை விரும்பிக் குடிகளை வருத்துகின்ற அரசனும்—உள் பொருள் சொல்லாச் சலம் மொழி மாந்தரும் - உற்றாரோடு உண்மைப்பொருளைச் சொல்லாது பொய் சொல்கின்ற மனிதரும்—இல் இருந்து எல்லை கடப்பாளும் - வீட்டின்கணிருந்து தன் வரம்பு கடந்து நடக்கும் மனையாளும்—இம்மூவர் வல்லே மழை அருக்கும் கோள் - ஆகிய இம்மூவரும் விரைந்து மழையைக் குறைக்கின்ற கிரகங்களாவர். எ - று.

சலம் - பொய். இம்மூவருமுள்ள நாட்டின் மழை பெய்யாதென்பது கருத்து. (கூ0)

தூர்ந்தொழுகிக் கண்ணுந் துணைக டுணைகளே
சார்ந்தொழுகிக் கண்ணுஞ் சலவர்—சலவரே
யீர்ந்தகல் லின்னுக் கயவ ரிவர்மூவர்
தேர்ந்தக்காற் றோன்றும் பொருள்.

இ - ள். தூர்ந்து ஒழுகிக்கண்ணும் துணைகள் துணைகளே - வருவாய் அடைபட்டு ஒருவன் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற விடத்தும் சுற்றத்தார் சுற்றத்தாரேயாவர்—சார்ந்து ஒழுகிக் கண்ணும் சலவர் சலவரே - மனங்கலந்தொழுகிய விடத்தும் பகைவர் பகைவரேயாவர்—ஈர்ந்த கல் இன்னுக் கயவர் - பிளக்கப்பட்ட கல்லுப்போல்வார் இன்னாத கீழ்மக்களேயாவர்—இவர் மூவர் தேர்ந்தக்கால் தோன்றும் பொருள் - இவர் மூவரும் அறிவுடையார் ஆராயுமிடத்துக் காணப்படும் பொருள்களாவார். எ - று.

ஒழுகியக்கண்ணுமென்பன இரண்டும் இடைக்குறைவிகாரமாயின. தேர்ந்தக்காற் றோன்றும் பொருளெனவே, ஆராயாவிடத்து இப்படிப்பட்டவரென்று அறியப்படாரென்பது தோன்றுகின்றது. (கூக)

கண்ணுக் கணிகலங் கண்ணோட்டங் காமுற்ற
பெண்ணுக் கணிகல நாணுடைமை—நண்ணு
மறுமைக் கணிகலங் கல்வியிம் மூன்றுங்
குறியுடையார் கண்ணே யுள.

இ - ள். கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் - கண்ணுக்கு ஆபரணமாவது தாக்ஷிணியமுடைமையாம்—காமுற்ற பெண்ணுக்கு அணிகலம் நாண் உடைமை - கணவனால் விரும்பப்பட்ட பெண்ணுக்கு ஆபரணமாவது வெட்கமுடைமையாம்—நண்ணும் மறுமைக்கு அணிகலம் கல்வி - தானே வருகின்ற மறுபிறப்பிற்கு ஆபரணமாவது வித்தையாகும்—இம்மூன்றும் குறி உடையார்கண்ணே உள - இம்மூன்றும் இயற்கையறிவுடையாரிடத்தே உளவாம். எ - று.

ஒருவன் இம்மையிற் கற்ற கல்வியானது அவனை நல்வழிப்படுத்தி மறுமையில் இன்பம் பயத்தலால் மறுமைக்கணிகலமென்றார். (கூஉ)

குருடன் மனையா ளழகு மிருடீரக்
கற்றறி வில்லான் கதழ்ந்துரையும்—பற்றிய
பண்ணிற் றெரியாதான் யாழ்கேட்பு மிம்மூன்று
மெண்ணிற் றெரியாப் பொருள்.

இ - ள். குருடன் மனையாள் அழகும் - குருடனுடைய மனையாளினது அழகும்—இருள் தீரக் கற்று அறிவு இல்லான் கதழ்ந்து உரையும் - மயக்கந்தீர உண்மை நூலைக் கற்று அதன் பொருளை அறிதலில்லாதவன் விரைந்து சொல்லுஞ்சொல்லும்—பற்றிய பண்ணில் தெரியாதான் யாழ் கேட்பும் - விரும்பப்பட்ட இசைநூலிற் பயிற்சியில்லாதவன் வீணையினோசையைக் கேட்டலும்—இம்மூன்றும் எண்ணில்தெரியாப் பொருள் - ஆகிய இம்மூன்றும் ஆராயுமிடத்து அம்மூவர்க்கும் முறையே தெரியாத பொருள்களாம். எ - று.

கதழ்வு - விரைவு. (௫௩)

**தன்பயந் தூக்காரைச் சார்தலுந் தாம்பயவா**
**நன்பயங் காய்வின்கட் கூறலும்—பின்பயவாக்**
**குற்றம் பிறர்மே லுரைத்தலு மிம்மூன்றுந்**
**தெற்றென வில்லார் தொழில்.**

இ - ள். தன் பயம் தூக்காரைச் சார்தலும் - தனக்கு வரும் பயனை ஆராய்ந்து அதற்கு உதவிசெய்யாதவரை அடுத்தலும்—காய்வின்கண் தாம் பயவா நன் பயம் கூறலும் - ஒருவன் கோபஞ்செய்கின்றவிடத்துத் தாம் பயன்படாமற் போவனவாகிய சில உறுதிகள் சொல்லுதலும்—பின் பயவாக் குற்றம் பிறர் மேல் உரைத்தலும் - அப்போது பயன்படினும் பின்னே பயன்படுதலில்லாத குற்றங்களைப் பிறர்மேற் சொல்லுதலும்—இம்மூன்றும் தெற்றெனவு இல்லார் தொழில் - ஆகிய இம்மூன்றும் தெளிவில்லாதாருடைய செய்கைகளாம். எ - று. (௫௪)

**அருமறை காவாத நட்பும் பெருமையை**
**வேண்டாது விட்டொழிந்த பெண்பாலும்-யாண்டானுஞ்**
**செற்றங்கொண் டாடுஞ் சிறுதொழும்பு மிம்மூவ**
**ரொற்றா ளெனப்படு வார்.**



இ - ள். அரு மறை காவாத நட்பும் - வெளிப்படுத்தக் கூடாத ரகசியப்பொருளைக் காப்பாற்றாத நட்பாளனும்—பெருமையை வேண்டாது விட்டு ஒழிந்த பெண்பாலும் - பெருமைக் குணத்தை விரும்பாது விட்டு நீங்கிய பெண்ணும்—யாண்டானும் செற்றம் கொண்டாடும் சிறு தொழும்பும் - எப்பொழுதும் வைரங்கொண்டாடுங் குற்றேவலாளனும்—இம் மூவர் ஒற்றாள் எனப்படுவார் - ஆகிய இம் மூவரும் ஒற்றாள்களென்று சொல்லப்படுவார். எ - று.

பெருமைக்குணம் கற்பு முதலியன. ஆன் சாரியை. செற்றம் - வைரம். ஒற்றாள் - ஒருவரிடத்துள்ள குற்றத்தை அறிந்து போய்ப் பிறர்க்கு அறிவிப்பவன். (௫௫)

**முந்தை யெழுத்தின் வரவுணர்ந்து பிற்பாடு**
**தந்தையுந் தாயும் வழிபட்டு—வந்த**
**வொழுக்கம் பெருநெறி சேர்தலிம் மூன்றும்**
**விழுப்ப நெறிதூரா வாறு.**

இ - ள். முந்தை எழுத்தின் வரவு - ஒருவனுக்கு இளமைப் பருவத்திலே கல்வியறிவுண்டாதலும்—பிற்பாடு உணர்ந்து தந்தையும் தாயும் வழிபட்டு வந்த ஒழுக்கம் - அதன்பின்பு அக்கல்விப்பொருளை உணர்ந்து தந்தையையுந் தாயையும் பூசித்து வந்த ஒழுக்கமுடைமையும்—பெரு நெறி சேர்தல் - பின்பு பெரியோரது வழியைச் சேர்தலும்—இம்மூன்றும் விழுப்ப நெறி தூரா ஆறு - ஆகிய இம்மூன்றும் உயர்வைத்தரும் வழியைத் தூராத விதங்களாம். எ - று.

எழுத்தென்பது கல்விக்கு ஆகுபெயர். விழுப்பம் - உயர்வு, கல்வியறிவிற்குப் பயன் தந்தை தாய்களை வழிபடுதலும், அவ்வழிபாட்டிற்குப் பயன் பெரியோர் வழியைச் சேர்தலுமாதலின், இம்முறை வைத்தார். (௫௬)

கொட்டி யளந்தமையாப் பாடலுந் தட்டித்துப்
பிச்சைபுக் குண்பான் பிளிற்றலுந்—துச்சிருந்தா
னாளுங் கலங்கா முறுதலு மிம்மூன்றுங்
கேள்வியு ளின்னா தன.

இ - ள். கொட்டி அளந்து அமையாப் பாடலும் - தாளவோசையை அளந்து அதற்குத் தகும்படி பாடாத பாடலும்—தட்டித்துப் பிச்சை புக்கு உண்பான் பிளிற்றலும் - கைதட்டிச் சோற்றுப்பிச்சைக்குப் போய் வாங்கி உண்பவனுடைய ஆரவாரித்தலும்—துச்சு இருந்தான் ஆளும் கலம் காமுறுதலும் - ஒதுக்குக்குடியிருந்தவன் அவ்வில்லத்தானுடைய ஆளும் பாத்திரங்களை இச்சித்தலும்—இம்மூன்றும் கேள்வியுள் இன்னாதன - ஆகிய இம்மூன்றும் கேட்கப்படுமவைகளுள் இனிமையாகாதனவாம். எ - று.

கொட்டி - தாளம். து - புசிப்பு. துச்சிருத்தல் - ஒதுக்குக்குடியிருத்தல். (௫௭)

பழமையை நோக்கி யளித்தல் கிழமையால்
கேளீ ருவப்பத் தழுவுதல்—கேளீராய்த்
துன்னிய சொல்லா லினந்திரட்ட லிம்மூன்று
மன்னற் கிளையான் றொழில்.

இ - ள். பழமையை நோக்கி அளித்தல் - நெடுங்காலமாகப் பழகிவருந் தொடர்ச்சியை நோக்கி அத்தொடர்ச்சியுடையாரைக் காப்பாற்றுதலும்—கிழமையால் கேளீர் உவப்பத் தழுவுதல் - செய்யும் உரிமையாற் சுற்றத்தார் மகிழும்படி அவரைத் தழுவுதலும்—கேளீராய்த் துன்னிய சொல்லால் இனம் திரட்டல் - தனக்கு நட்பாளராய்ச் சூழும்படி இனிய சொல்லினால் நல்லினத்தைச் சேர்த்தலும்—இம்மூன்றும் மன்னற்கு இளையான் தொழில் - ஆகிய இம்மூன்றும் இளவரசனது தொழில்களாம். எ - று.



மன்னற்கிளையானை அமைச்சனென்பாருமுளர். தழுவுதல் - அரவணைத்தல். துன்னியவென்பது செய்யியவென்னும் வினையெச்சம். (௫௮)

இளைஞர்க் குதவாதான் செல்வமும் பைங்கூழ்
விளைவின்கட் போற்றா னுழவு—மிளையனாய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையு மிம்மூன்று
முள்ளன போலக் கெடும்.

இ - ள். இளைஞர்க்கு உதவாதான் செல்வமும் - சுற்றத்தார்க்கு உதவாதவனுடைய செல்வமும்—பைங்கூழ் விளைவின்கண் போற்றான் உழவும் - பசிய பயிர் தனக்குப் பயன் கொடுக்குங்காலத்துப் பாதுகாக்கமாட்டாதவனுடைய உழவு தொழிலும்—இளையனாய்க் கள் உண்டு வாழ்வான் குடிமையும் - இளையனாயிருந்துவைத்துக் கள்ளுண்டு வாழ்கின்றவனுடைய குடிப்பிறப்பும்—இம்மூன்றும் உள்ளனபோலக் கெடும் - ஆகிய இம்மூன்றும் நிலைநிற்பனபோலத் தோன்றிக்கெடும். எ - று. பைங்கூழ் - பயிர். (௫௯)

பேஎய்ப் பிறப்பிற் பெரும்பசியும் பாஅய்
விலங்கின் பிறப்பின் வெருவும்—புலந்தெரியா
மக்கட் பிறப்பி னிரப்பிடும்பை யிம்மூன்றுந்
துக்கப் பிறப்பாய் விடும்.

இ - ள். பேய்ப் பிறப்பில் பெரும் பசியும் - பேயினது பிறப்பிலே பெரிய பசியால் வருந்துன்பமும்—பாய் விலங்கின் பிறப்பின் வெருவும் - பாய்கின்ற மிருகத்தின் பிறப்பிலே அச்சத்தால் வருந்துன்பமும்—மக்கள் பிறப்பில் புலம் தெரியா இரப்பு இடும்பை - மனிதப்பிறப்பிலே அறிவை மழுங்கச்செய்கின்ற வறுமையால் வருந்துன்பமும் உண்டாகின்றன—இம்மூன்றும் துக்கப் பிறப்பாய்விடும் - ஆதலால் இம்மூன்றும் துன்பவநுபவத்திற்கு ஏதுவாகிய பிறப்புக்களாய்விடும். எ - று.

இடும்பையென்பது மற்றைப் பசி வெருவல்களோடுங் கூட்டப்பட்டது. செல்வருந் தம்மின் மிக்க செல்வரை நோக்கித் தம்மை வறியராகக் கருதலால், மக்கட்பிறப்புக்குப் பொதுப்பட நிரப்பிடும்பை சொல்லப்பட்டது. (௬0)

ஐயறிவுந் தம்மை யடைய வொழுகுத
லெய்துவ தெய்தாமை முற்காத்தல்—வைகலு
மாறேற்கு மன்னர் நிலையறித லிம்மூன்றுஞ்
சீரேற்ற பேரமைச்சர் கோள்.

இ-ள். ஐ அறிவும் தம்மை அடைய ஒழுகுதல் - ஐம்பொறியறிவுகளும் தமக்கு வசப்பட்டு நிற்க நடத்தலும்—எய்துவது எய்தாமை முன் காத்தல் - அரசனுக்கு வருவதாகிய ஆபத்தை வாராதபடி முன்னறிந்து காத்தலும்—வைகலும் மாறு ஏற்கும் மன்னர் நிலை அறிதல் - எப்போதும் பகைமையை மேற்கொள்ளுகின்ற அரசர்களுடைய நிலையை அறிதலும்—இம்மூன்றும் சீர் ஏற்ற பேர் அமைச்சர் கோள் - ஆகிய இம்மூன்றும் கீர்த்தியை மேற்கொண்ட பெரிய மந்திரிகளாலே கொள்ளப்படுமவைகளாம். எ-று. (௬௧)

நன்றிப் பயன்றூக்கா நாணிலியுஞ் சான்றோர்முன்
மன்றிற் கொடும்பா டுரைப்பானு—நன்றின்றி
வைத்த வடைக்கலங் கொள்வானு மிம்மூவ
ரெச்ச மிழந்துவாழ் வார்.

இ-ள். நன்றிப் பயன் தூக்கா நாண் இலியும் - ஒருவன் தனக்குச் செய்த நன்றியின் பயனை அளந்தறியாத நாணில்லாதவனும்—சான்றோர் முன் மன்றில் கொடும்பாடு உரைப்பானும் - பெரியோர்முன்னே சபையிலே நின்று கொடிய சொற்களைச் சொல்லுகின்றவனும்—நன்று இன்றி வைத்த அடைக்கலம் கொள்வானும் - நற்செய்கையிலனாகி ஒருவன்வைத்த அடைக்கலத்தை அபகரிக்கின்றவனும்—இம்மூவர் எச்சம் இழந்து வாழ்வார் - ஆகிய இம்மூவரும் தமக்குப் பின் சந்தானத்தை இழந்து வாழ்வார்கள். எ-று.



வாழ்வாரென்றது குறிப்பால் கெடுவாரென்பதை உணர்த்திற்று. எஞ்சிநிற்பது எச்சமாதலால் அது கீர்த்திக்குமாம். (௬௨)

நோவஞ்சா தாரோடு நட்பும் விருந்தஞ்சு
மீர்வளையை யில்லத் திருத்தலுஞ்—சீர்பயவாத்
தன்மையி லாள ரயலிருப்பு மிம்மூன்று
நன்மை பயத்த லில.

இ-ள். நோ அஞ்சாதாரோடு நட்பும் - தமக்கு வரும் வருத்தத்துக்கு அஞ்சி வாராமற் காவாதவரோடு கொள்ளப்பட்ட நேசமும்—விருந்து அஞ்சும் ஈர் வளையை இல்லத்து இருத்தலும் - விருந்தாளிக்கு இடுதற்கு அஞ்சுகின்ற மனைவியை வீட்டில் வைத்துக்கொண்டு வாழ்தலும்—சீர் பயவாத் தன்மை இலாளர் அயல் இருப்பும் - சிறப்பைத் தாராத குணத்தையுடைய இல்வாழ்வோருக்கு அயலிலே குடியிருப்பும்—இம்மூன்றும் நன்மை பயத்தல் இல - ஆகிய இம்மூன்றும் ஒருவனுக்கு நன்மையை உண்டாக்குதலுடையவல்லவாம். எ-று.

ஈர்வளை அரிந்தெடுக்கப்பட்ட சங்கவளையலையுடையவள். ()

நல்விருந் தோம்பலி னட்டாளாம் வைகலு
மில்புறஞ் செய்தலி னீன்றதாய்—தொல்குடியின்
மக்கட் பெறலின் மனைக்கிழத்தி யிம்மூன்றுங்
கற்புடையாள் பூண்ட கடன்.

இ-ள். நல் விருந்து ஓம்பலின் நட்டாள் ஆம் - நல்ல விருந்துகளைப் பாதுகாத்தலினாலே தனக்குச் சினேகிதையாம்—வைகலும் இல் புறஞ்செய்தலின் ஈன்ற தாய் - எப்போதும் தன் மனையறத்தைக் காப்பாற்றலினாலே பெற்ற தாயாம்—தொல் குடியின் மக்கள் பெறலின் மனைக் கிழத்தி - தன் பழைய

குடிக்குத் தகுந்த புதல்வரைப் பெறுதலினாலே மனைவியாம்—இம்மூன்றும் கற்பு உடையாள் பூண்ட கடன் - இம்மூன்றும் பதிவிரதாதருமத்தையுடையவள் மேற்கொண்ட கடமைகளாம். எ - று.

ஆமென்பதை மற்றையிரண்டனோடுங் கூட்டுக. (௬௪)

அச்ச மலைகடலிற் றோன்றலு மார்வுற்ற
விட்டகல கில்லாத வேட்கையுங்—கட்டிய
மெய்ந்நிலை காணா வெகுளியு மிம்மூன்றுந்
தந்நெய்யிற் றாம்பொரியு மாறு.

இ - ள். அலை கடலில் அச்சம் தோன்றலும் - அலைகடல் போல் அளவில்லாத பயமானது தன்மனசிலே தோன்றுதலும்—ஆர்வுற்ற விட்டு அகலகில்லாத வேட்கையும் - அநுபவித்தவைகளைப் பின்னும் விட்டு நீங்கமாட்டாத விருப்பமும்—கட்டிய மெய் நிலை காணா வெகுளியும் - பெரியோரால் உறுதியாகத் தழுவப்பட்ட மெய்யினது நிலைமையைக் காணவொட்டாத கோபமும்—இம்மூன்றும் தம் நெய்யில் தாம் பொரியுமாறு - ஆகிய இம்மூன்றும் ஆடு முதலானவை தம்மிடத்திற்பிறந்த நெய்யிலே தாம் பொரியுமாறுபோலத் தம்மிடத்துப் பிறந்து தம்மை வேவச்செய்வனவாம். எ - று.

ஆர்தல் - அநுபவித்தல். (௬௫)

கொழுநனை யில்லாள் கறையும் வழிநிற்குஞ்
சிற்றாளில் லாதான்கைம் மோதிரமும்—பற்றிய
கோல்கோடி வாழு மரசனு மிம்மூன்றுஞ்
சால்போடு பட்ட தில.

இ - ள். கொழுநனை இல்லாள் கறையும் - கணவனையில்லாதவளது மாச றுதவும்—வழி நிற்கும் சிற்றாள் இல்லாதான் கைம் மோதிரமும் - தன்னேவல்வழி நிற்கின்ற சிற்றாளையில்லாதவனது கையிலிடப்பட்ட மோதிரமும்—பற்றிய கோல் கோடி வாழும் அரசனும் - தான் பற்றிய கோல் கோடி வாழும் அரசனும்—இம்மூன்றும் சால்போடு பட்டதில - ஆகிய இம்மூன்றும் நிறையோடு பொருந்திய சிறப்பையுடையவல்லவாம். எ - று.

சிற்றாளில்லாதவன் அவன் கையாற் செய்விக்கப்படுந் தொழிலைத் தன்கையாற் செய்யவேண்டுதலின், அம்மோதிரத்திற்குச் சிறப்பில்லையாயிற்று. மிகுதிபற்றி உயர்திணை அஃறிணையோடு முடிந்தது. (௬௬)

எதிர்நிற்கும் பெண்ணு மியல்பி றொழும்புஞ்
செயிர்நிற்குஞ் சுற்றமு மாகி—மயிர்நரைப்ப
முந்தைப் பழவினையாய்த் தின்னு மிவைமூன்று
நொந்தார் செயக்கிடந்த தில்.

இ - ள். எதிர் நிற்கும் பெண்ணும் - தான் கோபித்தால் தன்னெதிர் நின்று பேசும் மனையாளும்—இயல்பு இல் தொழும்பும் - ஒழுக்கமில்லாத ஏவலாளும்—செயிர் நிற்கும் சுற்றமும் ஆகி - மனத்திலே வைரம் போகாதே நிற்குஞ் சுற்றமும் எனப் பெயர் கொண்டு—முந்தைப் பழவினை ஆய் மயிர்நரைப்பத் தின்னும் இவை மூன்றும் - முற்காலத்திலே செயப்பட்ட பழவினைப் பயனாய்த் தன்மயிர் நரைக்குமளவும் ஒருவனைத் தின்னுகின்ற இவை மூன்றுக்கும்—நொந்தார் செயக்கிடந்தது இல் - மனநொந்தார் செய்யக் கிடந்ததொரு பரிகாரம் இல்லை. எ - று. தொழும்பு ஆகுபெயர். (௬௭)

இல்லார்க்கொன் றீயு முடைமையு மிவ்வுலகி
னில்லாமை யுள்ளு நெறிப்பாடு—மெவ்வுயிர்க்குந்
துன்புறுவ செய்யாத தூய்மையு மிம்மூன்று
நன்றறியு மாந்தர்க் குள.

இ - ள். இல்லார்க்கு ஒன்று ஈயும் உடைமையும் - தரித்திரர்க்கு ஒன்றைக் கொடுக்கும் செல்வமும்—இவ்வுலகின் நில்

லாமை உள்ளும் நெறிப்பாடும் - இவ்வுலகத்தில் உண்டான பொருள்களினுடைய நிலையாமையை விசாரித்தறியும் வழியிலே செல்லுதலும்—எவ்வுயிர்க்கும் துன்பு உறுவ செய்யாத தூய்மையும் - எவ்வகைப்பட்ட உயிர்களிடத்தும் துன்பமடைவனவற்றைச் செய்யாத பரிசுத்தகுணமும்—இம்மூன்றும் நன்று அறியும் மாந்தர்க்கு உள - ஆகிய இம்மூன்றும் அறத்தின்வழியை அறியும் மனிதர்களுக்கு உண்டாம். எ - று. (௬அ)

**அருந்தொழி லாற்றும் பகடுந் திருந்திய**
**மெய்நிறைந்து நீடிருந்த கன்னியு நொந்து**
**நெறிமாறி வந்த விருந்துமிம் மூன்றும்**
**பெறுமா றரிய பொருள்.**

இ - ள். அரும் தொழில் ஆற்றும் பகடும் - அரிய தொழில்களைச் செய்ய வல்ல கடாவும்—திருந்திய மெய் நிறைந்து நீடு இருந்த கன்னியும் - திருந்திய மெய் நிரம்பி நெடுங்காலம் மணமில்லாதிருந்த கன்னிகையும்—நொந்து நெறி மாறிவந்த விருந்தும் - துன்புற்று வழி தப்பிவந்த விருந்தும்—இம்மூன்றும் பெறுமாறு அரிய பொருள் - ஆகிய இம்மூன்றும் பெறுதற்கரிய பொருள்களாம். எ - று.

அரிய தொழில் பெரும்பாரங்கொண்ட பண்டியை ஈர்த்துச் செல்லுகை முதலியவை. இங்கே மெய்யென்றது பெண்ணிற்குச் சிறந்த அவயவங்களைக் காட்டுகின்றது. (௬௯)

**காவோ டறக்குளந் தொட்டானு நாவினால்**
**வேதங் கரைகண்ட பார்ப்பானுந்—தீதிகந்**
**தொல்வதுபாத் துண்ணு மொருவனு மிம்மூவர்**
**செல்வ ரெனப்படு வார்.**

இ - ள். காவோடு அறக்குளம் தொட்டானும் - சோலையைவைத்து அறத்திற்குரிய குளத்தினைத் தோண்டினவனும்—நாவினால் வேதம் கரை கண்ட பார்ப்பானும் - நாவினாலோதி



வேதங்களினெல்லையைக் கண்ட பிராமணனும்—தீது இகந்து ஒல்வது பாத்து உண்ணும் ஒருவனும் - தீயவழியைக் கடந்து தனக்கு இசைவதனைப் பகுத்துண்டு நின்ற ஒருவனும்—இம்மூவர் செல்வர் எனப் படுவார் - ஆகிய இம்மூவரும் செல்வத்தையுடையவரென்று சொல்லப்படுவார். எ - று.

காவென்றதற்கேற்ப வைத்தென்பது வருவிக்கப்பட்டது. தோண்டுவித்தவனைத் தோண்டினனென உபசரித்தார். (௭0)

**உடுத்தாடை யில்லாதார் நீராட்டும் பெண்டீர்**
**தொடுத்தாண்ட வைப்போர் புகலுங்—கொடுத்தளிக்கு**
**மாண்மை யுடையவர் நல்குரவு மிம்மூன்றுங்**
**காண வரியவென் கண்.**

இ - ள். உடுத்த ஆடை இல்லாதார் நீர் ஆட்டும் - உடுக்கப்பட்ட ஆடையில்லாதவராகி நீராடுதலும்—பெண்டீர் தொடுத்து ஆண்டு அவைப் போர் புகலும் - பெண்கள் பிறரோடு வழக்குத் தொடுத்துச் சபையின்கண்ணே போர் செய்வதற்குப் புகுதலும்—கொடுத்து அளிக்கும் ஆண்மை உடையவர் நல்குரவும் - பிறர்க்குக் கொடுத்துக் காப்பாற்றுகின்ற ஆண்மையையுடையவரது வறுமையும்—இம்மூன்றும் என் கண் காண அரிய - ஆகிய இம்மூன்றும் என் கண்கள் பார்க்கத் தகுவனவல்லவாம். எ - று.

ஆண்டு அசை. இங்கே அருமை தகாமை குறித்து நின்றது.

**நிறைநெஞ் சுடையானை நல்குர வஞ்சு**
**மறனை நினைப்பானை யல்பொரு ளஞ்சு**
**மறவனை யெவ்வுயிரு மஞ்சுமிம் மூன்றுந்**
**திறவதிற் றீர்ந்த பொருள்.**

இ - ள். நிறை நெஞ்சு உடையானை நல்குரவு அஞ்சும் - புலன்கண்மேற் போகாது நிறுத்தப்படும் நெஞ்சினையுடைய

வனுக்கு வறுமை அஞ்சும்—அறனை நினைப்பானை அல்பொருள் அஞ்சும் - தருமத்தையே சிந்திக்கின்றவனுக்குப் பாவம் அஞ்சும்—மறவனை எவ்வுயிரும் அஞ்சும் - கொலைத்தொழில் செய்வோனுக்கு எல்லாவுயிரும் அஞ்சும்—இம்மூன்றும் திறவதில் தீர்ந்த பொருள் - ஆதலால் இம்மூன்றச்சமும் வேறுபாட்டினீங்கி ஒத்த பொருள்களாம். எ - று.

அறனென்றமையால் அல்பொருளென்றதற்குப் பாவமெனப் பொருள் கூறப்பட்டது. (௭௨)

**இரந்துகொண் டொண்பொருள் செய்வலென் பானும்**
**பரந்தொழுகும் பெண்பாலைப் பாசமென் பானும்**
**விரிகட லூடுசெல் வானுமிம் மூவ**
**ரரிய துணிந்துவாழ் வார்.**

இ - ள். இரந்து கொண்டு ஒண் பொருள் செய்வல் என்பானும் - பிறரை இரந்து அவரிடம்பிச்சையை வாங்கி ஒள்ளிய செல்வப்பொருளைச் சம்பாதிப்பேனென்று சொல்லுகின்றவனும்—பரந்து ஒழுகும் பெண்பாலைப் பாசம் என்பானும் - பலரிடத்தும் வியாபித்துச் செல்லுகின்ற வேசையைத் தன்மேல் அன்புடையளென்கின்றவனும்—விரி கடல் ஊடு செல்வானும் - விரிந்த கடலிடத்துப் பொருள் சம்பாதித்தற்குப் போகின்றவனும்—இம்மூவர் அரிய துணிந்து வாழ்வார் - ஆகிய இம்மூவரும் தமக்கு முடியாத காரியங்களைச் செய்யத்துணிந்து வாழ்கின்றவராவார். எ - று. பாசம் ஆகுபெயர். (௭௩)

**கொலைநின்று தின்றொழுகு வானும் பெரியவர்**
**புல்லுங்காற் றான்புல்லும் பேதையு—மில்லெனக்கொன்**
**றீகென் பவனை நகுவானு மிம்மூவர்**
**யாதுங் கடைப்பிடியா தார்.**

இ - ள். கொலை நின்று தின்று ஒழுகுவானும் - கொலை செய்வதின்கண்ணே நின்று ஒருயிரை வதைத்து அதனிறைச்சி



யைத் தின்பவனும்—பெரியவர் புல்லுங்கால் தான் புல்லும் பேதையும்-தன்னிற் பெரியோர் தன்னைத் தழுவும்போது தானும் அவரை எதிரே தழுவுகின்ற அறிவில்லாதவனும்—எனக்கு ஒன்று இல் ஈக என்பவனை நகுவானும் - எனக்கு ஒருபொருள் இல்லை நீ கொடு என்று யாசிக்கின்றவனைப் பரிகாசஞ்செய்பவனும்—இம்மூவர் யாதும் கடைப்பிடியாதார்-ஆகிய இம்மூவரும் யாதோரறத்தையும் கடைப்பிடிக்கமாட்டாதவராவர். எ - று.

கடைப்பிடி - கருமம் முடிக்குந் துணிவு. (௭௪)

**வள்ளன்மை பூண்டான்கட் செல்வமு முள்ளத்**
**துணர்வுடையா னோதிய நூலும்—புணர்வின்கட்**
**டக்க தறியுந் தலைமகனு மிம்மூவர்**
**பொத்தின்றிக் காழ்த்த மரம்.**

இ - ள். வள்ளன்மை பூண்டான்கண் செல்வமும் - வரையாது கொடுத்தலையே ஆபரணமாகக் கொண்டவனிடத்துக் கூடிய செல்வமும்—உள்ளத்து உணர்வு உடையான் ஓதிய நூலும் - உள்ளத்திலே அறிவுடையான் கற்ற கல்வியும்—புணர்வின்கண் தக்கது அறியும் தலைமகனும் - பிறர் தன்னைச் சார்ந்தவிடத்து அவர்க்குச் செய்யத்தக்க காரியத்தை அறியுந் தலைவனும்—இம்மூவர் பொத்து இன்றிக் காழ்த்த மரம் - ஆகிய இம்மூவரும் பொந்தில்லாமல் வயிரம் பற்றிய மரம்போல் யாவராலும் விரும்பப்படுவர். எ - று.

பொந்து பொத்தெனத்தொடை நோக்கி வலித்தல் விகாரமாயிற்று. (௭௫)

**மாரிநாள் வந்த விருந்து மனம்பிறிதாய்க்**
**காரியத்திற் குன்றாக் கணிகையும்—வீரியத்து**
**மாற்ற மறுத்துரைக்குஞ் சேவகனு மிம்மூவர்**
**போற்றற் கரியார் புரிந்து.**

இ - ள். மாரி நாள் வந்த விருந்தும் - மழைக்காலத்தில் வந்த விருந்தினரும்—மனம் பிறிது ஆய்க் காரியத்தில் குன்றாக் கணிகையும் - தன்மனம் வேறுபட்டு நிற்கத் தன்காரியஞ் செய்தலிற் குறைவுபடாத வேசையும்—வீரியத்து மாற்றம் மறுத்து உரைக்கும் சேவகனும் - வீரியஞ்செய்யும் போர்வந்தால் நாயகன் சொன்னதை மறுத்துச் சொல்லுகின்ற சேவகனும்—இம்மூவர் புரிந்து போற்றற்கு அரியார் - ஆகிய இம்மூவரும் விரும்பிப் பாதுகாத்தற்கு அரியராவார். எ - று.

மாற்றம் - சொல். நாயகன் - தலைவன். (எசு)

**கயவரைக் கையிகந்து வாழ்த னயவரை**
**நள்ளிருளுங் கைவிடா நட்டொழுக—றெள்ளி**
**வடுவான வாராமற் காத்தலிம் மூன்றுங்**
**குடிமாசி லார்க்கே யுள.**

இ - ள். கயவரைக் கையிகந்து வாழ்தல் - கீழ்மக்களைக் கைவிட்டு வாழ்தலும்—நயவரை நல் இருளும் கைவிடா நட்டு ஒழுகல் - அன்புடையவரைப் பாதியிரவிலும் கைவிடாது நேசித்துக்கொண்டு நடத்தலும்—தெள்ளி வடு ஆன வாராமல் காத்தல்- ஆராய்ந்து தனக்குப் பழிப்பான காரியங்கள் வரவொட்டாமற் காத்துக்கொள்ளலும்—இம்மூன்றும் குடி மாசு இலார்க்கே உள - ஆகிய இம்மூன்றும் குடிப்பிறப்பிலே குற்றமில்லாதவர்க்கே உண்டாம். எ - று. (எஎ)

**தூய்மை யுடைமை துணிவாந் தொழிலகற்றும்**
**வாய்மை யுடைமை வனப்பாகுந்—தீமை**
**மனத்தினும் வாயினுஞ் சொல்லாமை மூன்றும்**
**தவத்திற் றருக்கினார் கோள்.**

இ - ள். தூய்மை உடைமை - பரிசுத்தமுடையனாயிருக்கையும்—துணிவாம் தொழில் அகற்றும் வாய்மை உடைமை - பெரியோராலே துணியப்பட்ட நற்செய்கையை விரிக்கின்ற



சத்தியமுடையவனாயிருக்கையும்—வனப்பு ஆகும் தீமை மனத்தினும் வாயினும் சொல்லாமை - அழகாகிய தீமையை மனத்தானினைத்தல் வாயாற்சொல்லல் இவை செய்யாமையும்—மூன்றும் தவத்தில் தருக்கினார் கோள் - ஆகிய இம் மூன்றும் தவத்திலே செருக்கி நின்றவர்களுடைய கொள்கையாம். எ - று.

அகற்றல் - விரித்தல். மனத்தினுமென்றதற்கேற்க நினையாமை வருவிக்கப்பட்டது. வனப்பாகுமென்றதை இவைசெய்யாமையென்பதனோடு கூட்டுக. (எஅ)

**பழியஞ்சான் வாழும் பசுவு மழிவினாற்**
**கொண்ட வருந்தவம் விட்டானுங்—கொண்டிருந்**
**தில்லஞ்சி வாழு மெருது மிவர்மூவர்**
**நெல்லுண்ட நெஞ்சிற்கோர் நோய்.**

இ - ள். பழி அஞ்சான் வாழும் பசுவும் - உலகம் பழிக்கும் பழிக்குப் பயப்படாது நடந்துகொள்ளும் பசுப்போல்வானும்—அழிவினால் கொண்ட அரும் தவம் விட்டானும் - செல்வக்கெடுதி வந்தபோது தனக்குரித்தாகக் கொண்ட அரிய தவத்தினை விட்டவனும்—கொண்டிருந்து இல் அஞ்சிவாழும் எருதும் - தனக்கு உட்பட்டவளாகக் கொண்டிருந்தும் மனைவியை அஞ்சி நடக்கின்ற எருதுபோல்வானும்—இவர் மூவர் நெல் உண்டல் நெஞ்சிற்கு ஓர் நோய் - ஆகிய இவர் மூவரும் மக்கள் உண்ணக்கடவதாகிய சோற்றையுண்ணுதல் அறிவுடையோர் நெஞ்சினுக்கு ஒருநோயாம். எ - று.

நெல் இருமடியாகுபெயர். (எகூ)

**முறைசெய்யான் பெற்ற தலைமையு நெஞ்சி**
**னிறையிலான் கொண்ட தவமு—நிறையொழுக்கந்**
**தேற்றாதான் பெற்ற வனப்பு மிவைமூன்றுந்**
**தூற்றின்கட் டூவிய வித்து.**

இ - ள். முறை செய்யான் பெற்ற தலைமையும் - முறையறிந்து செய்யமாட்டாதவன் பெற்ற எசமானத்துவமும்—நெஞ்சில் நிறை இலான் கொண்ட தவமும்-நெஞ்சத்தைப் புலன்களிலே செலுத்தாது நிறுத்துதலையில்லாதவன் மேற்கொண்ட தவமும்—நிறை ஒழுக்கம் தேற்றாதான் பெற்றவனப்பும் - குறைவற்ற வேதவொழுக்கத்தைத் தெளிந்து நடவாதவன் பெற்ற அழகும்—இவை மூன்றும் தூற்றின்கண் தூவிய வித்து - ஆகிய இவை மூன்றும் புதலில் விதைத்த விதையோடொக்கும். எ-று.

தேறாதானென்பது தேற்றாதானென விகாரமாயிற்று. (அ0)

தோள்வழங்கி வாழுந் துறைபோற் கணிகையு
நாள்கழகம் பார்க்கு நயமிலாச் சூதனும்
வாசிகொண் டொண்பொருள் செய்வானு மிம்மூவ
ராசைக் கடலுளாழ் வார்.

இ - ள். துறை போல் தோள் வழங்கி வாழும் கணிகையும் - பலர்க்கும் பொதுவாய் நின்று தன்னிடத்து நீரைக் கொடுக்குந் துறைபோலப் பலர்க்கும் பொதுவாய் நின்று தனது தோளைக் கொடுத்து வாழ்கின்ற வேசையும்—நாள் கழகம் பார்க்கும் நயம் இலாச் சூதனும் - நாடோறும் சூதாடுமிடம் பார்த்துச் செல்லுகின்ற நீதியற்ற சூதனும்—வாசி கொண்டு ஒள் பொருள் செய்வானும் - வட்டம் வாங்கிக்கொண்டு திரவியத்தைத் தேடுவானும்—இம்மூவர் ஆசைக் கடலுள் ஆழ்வார் - ஆகிய இம்மூவரும் ஆசையாகிய சமுத்திரத்தில் அழுந்துவார். எ - று.

நயம்-நீதி. வாசி-வட்டம். அன்றி வட்டியெனினுமாம். (அக)

சான்றாருட் சான்றா னெனப்படுத லெஞ்ஞான்றுந்
தோய்ந்தாருட் டோய்ந்தா னெனப்படுதல்--பாய்ந்தெழுந்து
கொள்ளாருட் கொள்ளாத கூறாமை யிம்மூன்று
நல்லாள் வழங்கு நெறி.



இ - ள். சான்றாருள் சான்றான் எனப்படுதல் - நற்குணங்களாலே நிறைந்தோருள் நற்குணங்களாலே நிறைந்தோனென்று சொல்லப்படுதலும்—எஞ்ஞான்றும் தோய்ந்தாருள் தோய்ந்தான் எனப்படுதல் - எந்நாளும் நண்பு கொண்டு கலந்தவருள் நண்பு கொண்டு கலந்தவனென்று சொல்லப்படுதலும்—பாய்ந்து எழுந்து கொள்ளாருள் கொள்ளாத கூறாமை - தம்மேலே பாய்ந்தெழுந்து தஞ்சொல்லை அங்கீகாரஞ் செய்யாதவரிடத்து அவர் அங்கீகரியாதவைகளைச் சொல்லாமையும்—இம்மூன்றும் நல் ஆள் வழங்கும் நெறி - ஆகிய இம்மூன்றும் நன்மையை ஆள்வோன் செல்லும் வழிகளாம். எ - று. (அஉ)

உப்பின் பெருங்குப்பை நீர்படியி னில்லாகு
நட்பின் கொழுமுளை பொய்வழங்கி னில்லாகுஞ்
செப்ப முடையார் மழையனைய ரிம்மூன்றுஞ்
செப்ப நெறிதூரா வாறு.

இ - ள். உப்பின் பெரும் குப்பை நீர் படியின் இல்லாகும் - உப்பினது பெரிய குவியலானது தன்னிடத்து நீர் படியுமாயின் இல்லாமற்போம்—நட்பின் கொழு முளை பொய் வழங்கின் இல்லாகும் - சினேகத்தினது செழித்த ஆரம்பமானது பொய் சொன்னால் இல்லாமற்போம்—செப்பம் உடையார் மழை அனையர் - நடுவுநிலைமையையுடையவர் எல்லார்க்கும் மழைபோல் உபகரிப்பர்—இம்மூன்றும் செப்ப நெறி தூரா ஆறு - அந்நீர் படியாமையும் பொய் சொல்லாமையும் மழைபோலுபகரித்தலும் ஆகிய இம்மூன்று செய்கைகளும் செவ்விய வழியைத் தூராமைக்குச் சாதனங்களாம். எ - று. (அங)

வாய்நன் கமையாக் குளனும் வயிறாரத்
தாய்முலை யுண்ணாக் குழவியுஞ்—சேய்மரபிற்
கல்விமாண் பில்லாத மாந்தரு மிம்மூவர்
நல்குரவு சேரப்பட் டார்.

இ - ள். வாய் நன்கு அமையாக் குளனும் - நீர் வருவழி நன்றாக அமைந்திராத தடாகமும்—வயிறு ஆரத் தாய்முலை உண்ணாக் குழவியும் - தன் வயிறு நிறையத் தாயின் முலைப்பாலுண்ணாத குழந்தையும்—சேய் மரபில் கல்வி மாண்பு இல்லாத மாந்தரும் - இளமைப்பருவத்திற் கல்வி மாட்சிமையைப்பெறாத மனிதரும்—இம்மூவர் நல்குரவு சேரப்பட்டார் - ஆகிய இம்மூவரும் வறுமையால் அடையப்பட்டவராவர். எ - று.

வாய் - வழி. சேய்மரபென்றதற்கு வமிசபரம்பரையினீட்சியெனினுமாம். இம்மூவகையோர்க்கும் வறுமையுண்டாதற்கு ஐயமில்லாமையால் அத்துணிவுபற்றி அடையப்பட்டாரென இறந்தகாலத்தாற் கூறினார். (௮௪)

எள்ளப் படுமரபிற் றாகலு முள்பொருளைக்
கேட்டு மறவாத கூர்மையு முட்டின்றி
யுள்பொருள் சொல்லு முணர்ச்சியு மிம்மூன்று
மொள்ளிய வொற்றாட் குணம்.

இ - ள். எள்ளப்படு மரபிற்று ஆகலும் - தனது செய்கை பகைவரால் நன்குமதிக்கப்படாத முறைமையையுடைத்தாதலும்—உள் பொருளைக் கேட்டு மறவாத கூர்மையும் - கருத்து அவரிடத்து நிகழ்ந்துள்ள பொருளைக் கேட்டுப் பின் மறவாத கூர்மையையுடைத்தாதலும்—முட்டு இன்றி உள் பொருள் சொல்லும் உணர்ச்சியும் - வாக்குக் கருத்திலே வைக்கப்பட்ட அப்பொருளைத் தடைபடாமல் தன்னரசற்குச் சொல்லும் தெளிவுடைத்தாதலும்—இம்மூன்றும் ஒள்ளிய ஒற்று ஆள் குணம் - ஆகிய இம்மூன்றும் அறிவுடைய ஒற்றாளின் குணங்களாம். எ-று.

முட்டு - தடை. ஒற்றாள் - வேவுகாரன். (௮௫)



அற்புப் பெருந்தளை யாப்பு நெகிழ்ந்தொழிதல்
கற்புப் பெரும்புணை காதலிற் கைவிடுதல்
நட்பி னயநீர்மை நீங்க லிவைமூன்றுங்
குற்றந் தரூஉம் பகை.

இ - ள். அற்புப் பெரும் தளை யாப்பு நெகிழ்ந்து ஒழிதல் - உயிர்களிடத்துத் தனக்குள்ள அன்பாகிய பெரிய விலங்கு கட்டுத் தளர்ந்து நீங்கலும்—கற்புப் பெரும் புணை காதலிற் கைவிடுதல் - கல்வியாகிய பெரிய தெப்பத்தைப் பொருள் முதலியவற்றின்மேலுள்ள ஆசையாற் கைவிடுதலும்—நட்பின் நயநீர்மை நீங்கல் - ஒருவனிடத்து வைத்த நேசத்தால் நீதித்தன்மையினீங்குதலும்—இவை மூன்றும் குற்றம் தரூஉம் பகை - ஆகிய இம்மூன்றும் ஒருவனுக்குக் குற்றத்தைத் தருகின்ற பகைகளாம். எ - று.

அன்பு அற்பு எனத் திரிந்தது. (௮௬)

கொல்வது தானஞ்சான் வேண்டலுங் கல்விக்
ககன்ற வினம்புகு வானு மிருந்து
விழுநிதி குன்றுவிப் பானுமிம் மூவர்
முழுமக்க ளாகற்பா லார்.

இ - ள். கொல்வது தான் அஞ்சான் வேண்டலும் - ஒருயிரைக் கொல்லுதற்குத் தான் அஞ்சானாகி அதனைச் செய்ய விரும்பலும்—கல்விக்கு அகன்ற இனம் புகுவானும் - கல்விக்குத் தூரமாகிய கூட்டத்திலே பிரவேசிக்கின்றவனும்—இருந்து விழு நிதி குன்றுவிப்பானும் - ஒருமுயற்சியுஞ் செய்யாதிருந்து முன்புள்ள மிக்க திரவியத்தைக் குன்றச்செய்பவனும்—இம்மூவர் முழுமக்கள் ஆகற்பாலார் - ஆகிய இம்மூவரும் அறிவு நுழையப் புரையில்லாத முழுமக்களாகுந் தன்மையையுடையாராவர். எ - று. (௮௭)

பிணிதன்னைத் தின்னுங்காற் றான்வருந்து மாறுந்
தணிவில் பெருங்கூற் றுயிருண்ணு மாறும்
பிணைசெல்வ மாண்பின் றியங்க லிவைமூன்றும்
புணையி னிலைகலக்கு மாறு.

இ - ள். பிணி தன்னைத் தின்னுங்கால் தான் வருந்தும் ஆறும் - வியாதியானது தன்னைத் தின்னும் பொழுது தான் அதற்குத் துன்புற்று வருந்தும் விதமும்—தணிவு இல் பெரும் கூற்று உயிர் உண்ணும் ஆறும் - தாழ்வில்லாத பெரிய யமனானவன் உயிரைக் கொண்டுபோக வருத்தும் விதமும்—பிணை செல்வம் மாண்பு இன்றி இயங்கல் - விரும்பப்படுகின்ற செல்வமானது நிலையில்லாதபடி நீங்கும் விதமும்—இவைமூன்றும் புணையின் நிலை கலக்கும் ஆறு - ஆகிய இம்மூன்றும் ஒருவனுக்குப் பிறவிப்பெருங்கடற்குப் புணையாயுள்ள மனநிலையைக் கலக்குகின்ற கருவிகளாம். எ - று.

மாண்பு இங்கே நிலையைக்குறிப்பித்து நின்றது. இயங்கல் - நீங்கல். ஆறென்பது இயங்கலோடுங் கூட்டப்பட்டது. (அஅ)

அருளினை நெஞ்சத் தடைகொடா தானும்
பொருளினைத் துவ்வான் புதைத்துவைப் பானு
மிறந்தின்னா சொல்லகிற் பானுமிம் மூவர்
பிறந்தும் பிறந்திலா தார்.

இ - ள். அருளினை நெஞ்சத்து அடை கொடாதானும் - தயையை மனசினிடத்து நிறைத்துவையாதவனும்—பொருளினைத் துவ்வான் புதைத்து வைப்பானும் - திரவியத்தைப் பிறர்க்குங்கொடாது தானும் அநுபவியாது புதைத்து வைக்கின்றவனும்—இறந்து இன்னா சொல்லகிற்பானும் - தன்னிலை கடந்து பிறர்க்குத் துன்பந்தருகின்ற சொற்களைச் சொல்ல வல்லவனும்—இம்மூவர் பிறந்தும் பிறந்திலாதார் - ஆகிய இம்மூவரும் மனிதப்பிறவியிற் பிறந்திருந்தும் பிறவாதவராவர். எ - று.



பிறந்தார்க்கு முக்கியமாகவேண்டும் இவற்றைப் பெறாமையாற் பிறந்திலாதாரென்றார். துவ்வல்-அநுபவித்தல். இறத்தல்-கடத்தல். (அகூ)

ஈதற்குச் செய்க பொருளை யறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை யாது
மருள்புரிந்து சொல்லுக சொல்லையிம் மூன்று
மிருளுலகஞ் சேராத வாறு.

இ - ள். ஈதற்குப் பொருளைச் செய்க - பிறர்க்குக் கொடுக்கும்பொருட்டுத் திரவியத்தைத் தேடக்கடவன்—அறநெறி சேர்தற்குப் பெரு நூலைச் செய்க - தருமமார்க்கத்தைச் சம்பாதித்தற்பொருட்டுப் பெரிய நூல்களைக் கற்கக்கடவன்—யாதும் சொல்லை அருள் புரிந்து சொல்லுக - யாதாயினும் ஒருசொல்லைச் சொல்லின் அருளை விரும்பிச் சொல்லக்கடவன்—இம்மூன்றும் இருள் உலகம் சேராத ஆறு - இம்மூன்று செய்கைகளும் நரகத்தைச் சேரவொட்டாத வழிகளாம். எ - று. இருளுலகம் - நரகம். (கூ0)

பெறுதிக்கட் பொச்சாந் துரைத்த லுயிரை
யிறுதிக்கண் யாமிழந்தே மென்றன்—மறுவந்து
தன்னுடம்பு கன்றுங்கா னாணுத லிம்மூன்று
மன்னா வுடம்பின் குறி.

இ - ள். பெறுதிக்கண் பொச்சாந்து உரைத்தல் - தாய் தந்தை முதலிய பிராணிகளை உளராகப் பெற்றவிடத்து அவர் தமக்குச் செய்த உதவியையும் அவர்க்குத் தாம் செய்யவேண்டும் உதவியையும் மறந்து இகழ்ந்து சொல்லலும்—உயிரை இறுதிக்கண் யாம் இழந்தேம் என்றல் - அவர்கள் மரணத்தையடைந்தவிடத்து இவரை யாமிழந்தோமென்றிரங்குதலும்—மறு வந்து தன் உடம்பு கன்றுங்கால் நாணுதல் - நோயடைந்து

தன்னுடம்பு வாடுமிடத்து முன்பு அறஞ்செய்யப் பெற்றிலோமென்று நாணுதலும்—இம்மூன்றும் மன்னா உடம்பின் குறி - ஆகிய இம்மூன்றும் நிலையாத உடம்புடையவனது செய்கைகளாம். எ - று.

உயிரென்றது தாய் தந்தை முதலியோரை. மறு, குறி ஆகு பெயர்கள். இழிவுபற்றி உடம்புடையானை உடம்பென்றார். (கக)

விழுத்திணைத் தோன்றா தவனு மெழுத்தினை
யொன்று முணராத வேழையு—மென்று
மிறந்துரை காமுறு வானுமிம் மூவர்
பிறந்தும் பிறவா தவர்.

இ - ள். விழுத் திணைத் தோன்றாதவனும் - அறவொழுக்கங்களைப் பெறுதற்குரிய சீரிய குலத்திலே பிறவாதவனும்—எழுத்தினை ஒன்றும் உணராத ஏழையும் - இலக்கண நூலை எவ்வளவேனும் அறியாத பேதையும்—என்றும் இறந்த உரை காமுறுவானும் - எப்பொழுதும் முறை தப்பிச் சொல்லுஞ் சொல்லை இச்சிக்கின்றவனும்—இம்மூவர் பிறந்தும் பிறவாதவர் - ஆகிய இம்மூவரும் மக்கட்பிறப்பிற் பிறந்திருந்தும் பிறவாதவராவர். எ - று. எழுத்தென்றது ஆகுபெயர். (கஉ)

இருளாய்க் கழியு முலகமும் யாதுந்
தெரியா துரைக்கும் வெகுள்வும்—பொருளல்ல
காதற் படுக்கும் விழைவு மிவைமூன்றும்
பேதைமை வாழு முயிர்க்கு.

இ - ள். இருளாய்க் கழியும் உலகமும் - அறிவில்லாதவர்களுக்கு இடமாய் அதனால் அந்தகாரமாய் நாள் கழிகின்றதேசமும்—யாதும் தெரியாது உரைக்கும் வெகுள்வும் - நன்மை தீமைகளில் ஒன்றுந் தெரியாது சொல்லுகின்ற கோபிப்பும்—பொருள் அல்ல காதல் படுக்கும் விழைவும் - நற்பொருளல்லாதவைகளில் ஆசையை உண்டாக்கும் வேட்கையும்—இவை மூன்றும் வாழும் உயிர்க்குப் பேதைமை - ஆகிய இவைமூன்றும் வாழுகின்ற மக்களுயிருக்கு அறியாமையைத் தருவனவாம். எ - று. (கங)

நண்பிலார் மாட்டு நசைக்கிழமை செய்வானும்
பெண்பாலைக் காப்பிகழும் பேதையும்—பண்பி
லிழுக்கான சொல்லாடு வானுமிம் மூவ
ரொழுக்கங் கடைப்பிடியா தார்.

இ - ள். நண்பு இலார் மாட்டு நசைக் கிழமை செய்வானும் - சினேககுணமில்லாதவரிடத்தில் அன்புரிமையைச் செய்கின்றவனும்—பெண்பாலைக் காப்பு இகழும் பேதையும் - மனைவியைக் காப்பதனை இகழாநின்ற அறிவில்லாதவனும்—பண்பு இல் இழுக்கு ஆன சொல் ஆடுவானும் - குணமில்லாத வழுவுதலான சொற்களைச் சொல்லுகின்றவனும்—இம்மூவர் ஒழுக்கம் கடைப்பிடியாதார் - ஆகிய இம்மூவரும் தமக்குரிய ஒழுக்கத்தினை உறுதியாகப் பிடியாதவர்கள். எ - று.

அன்புரிமையாவது தன்னட்பினர் செயக்கிடந்ததை அவரைக் கேளாதே செய்தல். (கச)

அறிவழுங்கத் தின்னும் பசிநோயு மாந்தர்
செறிவழுங்கத் தோன்றும் விழைவுஞ்—செறுநரின்
வெவ்வுரை நோனா வெகுள்வு மிவைமூன்று
நல்வினை நீக்கும் படை.

இ - ள். அறிவு அழுங்கத் தின்னும் பசி நோயும் - தன்னறிவு கெடும்படி அதனைத் தின்னுகின்ற பசியாகிய வியாதியும்—செறிவு அழுங்கத் தோன்றும் விழைவும் - மனிதர்கள் தன்னைச் சேராதிருக்கும்படி உண்டாகின்ற பேராசையும்—செறுநரின் வெவ் உரை நோனா வெகுள்வும் - பகைவர்களுடைய கொடிய

சொற்களைப் பொறுத கோபமும்—இவை மூன்றும் நல்வினை நீக்கும் படை - ஆகிய இம்மூன்றும் ஒருவன் கொண்ட கருமத்தைக் கெடுக்கின்ற ஆயுதங்களாம். எ - று.

நோனுமை - பொறுமை. (௯௫)

கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி கொண்டன
செய்வகை செய்வான் றவசி கொடிதொரீஇ
நல்லவை செய்வா னரச னிவர்மூவர்
பெய்யெனப் பெய்யு மழை.

இ - ள். கொண்டான் குறிப்பு அறிவாள் பெண்டாட்டி - தன்னைக் கொண்ட கணவனுடைய குறிப்பறிந்து நடக்கின்றவள் பெண்டாட்டியாவாள்—கொண்டன செய்வகை செய்வான் தவசி - தான் மேற்கொண்ட விரதங்களைச் செய்யத்தக்க முறைப்படி செய்கின்றவன் தவசியாவான்—கொடிது ஒரீஇ நல்லவை செய்வான் அரசன் - தீங்கினை நீக்கி உயிர்களுக்கு இதமானவைகளைச் செய்கின்றவன் அரசனாவான்—இவர் மூவர் பெய் என மழை பெய்யும் - இம்மூவரும் பெய்யென்று சொல்லவே மழை பெய்யும். எ - று.

செய்வகை ஐம்பொறியடக்கன் முதலியவை. (௯௬)

ஐங்குரவ ராணை மறுத்தலு மார்வுற்ற
வெஞ்சாத நட்பினுட் பொய்வழக்கு—நெஞ்சமர்ந்த
கற்புடை யாளைத் துறத்தலு மிம்மூன்று
நற்புடையி லாளர் தொழில்.

இ - ள். ஐங்குரவர் ஆணைமறுத்தலும் - அரசன் உபாத்தியாயன் பிதா தமையன் ஆசாரியன் என்று சொல்லப்பட்ட ஐந்து குரவர்களுடைய ஆக்கினையைத் தடுத்து நடத்தலும்—ஆர்வுற்ற எஞ்சாத நட்பினுள் பொய் வழக்கும் - விரும்பப்பட்டவைகளிலே குறைவுபடாமற் பெறுதற்குரிய சினேகிதரிடத்துப்



பொய் பேசுதலும்—நெஞ்சு அமர்ந்த கற்பு உடையாளைத் துறத்தலும் - தன்மனத்தால் விரும்பப்பட்ட கற்பினையுடைய மனையாளை விடுதலும்—இம்மூன்றும் நற்புடையிலாளர் தொழில் - ஆகிய இம்மூன்றும் அறத்தின் வகையில்லாதவரது தொழில்களாம். எ - று.

குரவர் வழிபடத்தக்கவர். பொய்வழக்கு - பொய்யாகத் தொடுக்கப்பட்ட விவகாரமெனினுமாம். (௯௭)

செந்தீ முதல்வ ரறநினைந்து வாழ்தலும்
வெஞ்சின வேந்தன் முறைநெறியிற் சேர்தலும்
பெண்பால் கொழுநன் வழிச்செலவு மிம்மூன்றுந்
திங்கண்மும் மாரிக்கு வித்து.

இ - ள். செந்தீ முதல்வர் அறம் நினைந்து வாழ்தலும் - வேள்விச்செந்தீயை வளர்க்கின்ற மறைமுதல்வராகிய பிராமணர்கள் தருமத்தை மறவாது நினைந்துகொண்டு வாழ்தலும்—வெம் சின வேந்தன் முறை நெறியில் சேர்தலும் - வெவ்விதாகிய கோபத்தினையுடைய அரசனானவன் முறை நடாத்துகின்ற விதிவழியிலே சேர்ந்தொழுகுதலும்—பெண்பால் கொழுநன் வழிச் செலவும் - பெண்ணானவள் தன் கணவன் மனசுக்குத் தகுந்தவழியே நடத்தலும்—இம்மூன்றும் திங்கள் மும்மாரிக்கு வித்து - ஆகிய இம்மூன்றும் மாசந்தோறும் பெய்யவேண்டிய மூன்று மழைக்குங் காரணங்களாம். எ - று. (௯௮)

கற்றாரைக் கைவிட்டு வாழ்தலுங் காமுற்ற
பெட்டாங்கு செய்தொழுகும் பேதையு—முட்டின்றி
யல்லவை செய்யு மலவலையு மிம்மூவர்
நல்லுலகஞ் சேரா தவர்.

இ - ள். கற்றாரைக் கைவிட்டு வாழ்தலும் - கற்றவரை விட்டு நீங்கி வாழ்தலும்—காமுற்ற பெட்டாங்கு செய்து ஒழு

கும் பேதையும் - தான் விரும்பியவைகளை இச்சித்தபடியே செய்து நடக்கின்ற அறிவில்லாதவனும்—மூட்டு இன்றி அல்லவை செய்யும் அலவலையும் - தடையின்றித் தீங்குகளைச்செய்யும் பேச்சுக்காரனும்—இம்மூவர் நல் உலகம் சேராதவர் - ஆகிய இம்மூவரும் நல்லவுலகங்களிலே சேராதவர். எ - று.

அலவலை பேச்சுக்காரன். பெட்டவாங்கு பெட்டாங்கென நின்றது. (௧௧)

பத்திமை சான்ற படையும் பலர்தொகினு
மெத்துணையு மஞ்சா வெயிலரணும்—வைத்தமைந்த
வெண்ணி னுலவா விழுநிதியு மிம்மூன்று
மண்ணாளும் வேந்தர்க் குறுப்பு.

இ - ள். பத்திமை சான்ற படையும் - தன்மேல் அன்பு நிறைந்த சேனையும்—பலர் தொகினும் எத்துணையும் அஞ்சா எயில் அரணும் - சத்துருக்கள் பலர் சேர்ந்து வந்தாலும் எவ்வளவும் பயப்படவேண்டாத மதிலரணும்—எண்ணின் உலவா வைத்து அமைந்த விழு நிதியும்-எண்ணிக்கையில் அகப்படாத படி வைக்கப்பட்டு நிறைந்த சீரிய திரவியமும்—இம்மூன்றும் மண் ஆளும் வேந்தர்க்கு உறுப்பு - ஆகிய இம்மூன்றும் பூமியை ஆளுகின்ற அரசர்க்கு அவயவங்களாம். எ - று. (௧00)

திரிகடுகவுரை முற்றிற்று.



# பிரகடன பத்திரம்

| | ரூ. | அ. |
|---|---|---|
| கந்தபுராண வசனம் ஆப்பவுண்டு | 5 | 0 |
| ஷடி கலிகோ | 5 | 8 |
| திருவள்ளுவர் பரிமேலழகருரை | 5 | 0 |
| நன்னூற்காண்டிகையுரை ஆப்பவுண்டு | 3 | 12 |
| ஷடி கலிகோ | 4 | 0 |
| நன்னூல் விருத்தியுரை | 3 | 8 |
| திருக்கோவையாருரை | 3 | 0 |
| அருட்பா—இது அகத்தியர் தேவாரத்திரட்டும் திருவாசகமும் திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் பெரியபுராணச் செய்யுட்டிரட்டும் அடங்கியது. | 1 | 12 |
| இலக்கணக்கொத்துரை, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கணவிளக்கச் சூருவளி | 2 | 0 |
| சைவசமயநெறியுரை | 1 | 4 |
| திருவாசகம்—(மாணிக்கவாசகர் சரித்திரத்துடன்) | 0 | 8 |
| கொலைமறுத்தல் முதலிய—இது கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார் அடங்கியது. | 1 | 8 |
| சிதம்பரமான்மியம் | 0 | 3 |
| சிதம்பரமும்மணிக்கோவை | 0 | 3 |
| நித்தியகருமவிதி | 0 | 2 |
| நீதிநெறிவிளக்கம் மூலம் | 0 | 2 |
| நீதிநெறிவிளக்கம் உரையுடன் | 0 | 8 |
| திருக்குறள் மூலம் | 0 | 8 |
| திருக்குறள் சுருக்கம் | 0 | 5 |
| நால்வர்நான்மணிமாலை | 0 | 2 |
| அருணகிரியந்தாதி | 0 | 2 |

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள்
வித்தியாநுபாலன அச்சகம்,
நெ. 300, தங்கசாலைத் தெரு, சென்னை-1.